*கட்டப்பட்ட மாளிகையின் மதிற்சுவர்கள் இருப்பது கண்டறியப்பட்டது. செங்கற்களின் பருமன் 1.10 செ.மீ. ஆகும்.*

- *அடித்தளத்தில் கருங்கற் தூண்கள் 2 மீ இடைவெளியில் நடப்பட்டிருந்தது. குவார்ட்ஸ் மணிகள் தந்தப் பொருட்கள், சங்கு வளையல்கள், கூரை ஓடுகள் மற்றும் சீனப் பானை ஓடுகள் அகழாய்வில் சேகரிக்கப்பட்டன. இச்சீனப் பானை ஓடுகள், கி.பி. 11-12 ஆம் நூற்றாண்டில் மாட்சிமை பெற்ற சோழப் பேரரசர்கள் சீன நாட்டுடன் கொண்டிருந்த வாணிகத் தொடர்பை எடுத்தியம்புகின்றன.*

## 9. கண்ணனூர்

- *கி.பி. 13 ஆம் நூற்றாண்டில், ஹொய்சாலா மன்னர்களின் தலைநகரமாகக் கண்ணனூர் திகழ்ந்திருந்தது. தற்பொழுது சமயபுரம் என்று அழைக்கப்படும் இவ்வூர் திருச்சி மாவட்டத்தில் அமைந்துள்ளது.*
- *கண்ணனூருக்குத் தண்ணீர் கொண்டு வரப்பட்ட பழைய கால்வாய் பகுதியைக் கண்டறியும் பொருட்டு, அகழாய்வு நடத்தப்பட்டது. அகழாய்வில் சிவப்பு வண்ணப் பானை ஓடுகள், சீனப் பானை ஓடுகள், சுடுமண் மணிகள், கண்ணாடி வளையல்கள், அதிக அளவில் இரும்பு ஆணிகள் மற்றும் மத்திய காலத்தைச் சார்ந்த கூரை ஓடுகள் கண்டெடுக்கப்பட்டன.*
- *ஆய்வில் வெளிப்படுத்தப்பட்ட கட்டடப் பகுதி மற்றும் கால்வாய்ப் பகுதி கி.பி. 13-14 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கணக்கிடப்பட்டுள்ளது.*

## 10. பழையாறை

- *மத்திய காலச் சோழர்களின் இரண்டாம் தலைநகரமாகப் பழையாறை திகழ்ந்திருந்தது. இவ்வூர், கும்பகோணத்திலிருந்து சுமார் 7 கி.மீ. தொலைவில் உள்ளது. நந்தன்மேடு என்ற பகுதியில் பெருங்கற்காலத் தாழிகள் கண்டெடுக்கப்பட்டன.*
- *இங்கு நடத்தப்பட்ட அகழாய்வில், பெருங்கற்காலத்தைச் சார்ந்த கருப்பு மற்றும் சிவப்பு வண்ணப் பானை ஓடுகளும், மத்திய காலத்தைச் சார்ந்த சிவப்புப் பானை ஓடுகளும், கருப்பு வண்ணப் பானை ஓடுகளும், பீங்கான் ஓடுகளும், சங்கு வளையல்களும், கண்ணாடி வளையல்களும், சுடுமண் காதணிகள் மற்றும் சுடுமண் கெண்டி மூக்குகளும் கண்டெடுக்கப்பட்டன*

## 11. அழகன்குளம்

- *அழகன்குளம் கிராமம், கிழக்கு கடற்கரைப் பகுதியில், இராமநாதபுரம் மாவட்டத்தில் அமைந்துள்ளது. வைகை ஆற்றங்கரையில் உள்ள இவ்வூர் கடற்கரையிலிருந்து சுமார் 3 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.*
- *அகழாய்வில் தமிழ் பிராமி பொறிக்கப்பட்ட சிவப்பு நிற பானை ஓடுகளுடன் மத்திய தரைக்கடல் பகுதியைச் சார்ந்த நூற்றுக்கு மேற்பட்ட ரௌலட்டட் மற்றும் ஆம்போரா பானை ஓடுகளும் கிடைக்கப் பெற்றன.*

- *தமிழ் பிராமி பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கி.பி. 100 காலத்தைச் சார்ந்ததாகும். மேலும், துளையுடன் கூடிய ஓடுகள், செங்கற்கள், மணிகள் மற்றும் மூன்று ரோமானியக் காசுகள் அகழாய்வில் சேகரிக்கப்பட்டுள்ளன.*
- *ரோமானியக் காசு ஒன்றில் முன்புறம் ரோமானியப் பேரரசரின் தலைப் பகுதியும், பின்புறம் வெற்றி தெய்வத்தின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளது. எழுத்தமைதியின் மூலம் பேரரசன் 2வது வேலன்டைன் (கி.பி. 375) காலத்தில் இக்காசு வெளியிட்டதாக அறியப்படுகிறது.*

## *12.* படைவேடு

- *திருவண்ணாமலை மாவட்டம், போளூர் வட்டத்தில் அமைந்துள்ளது. பண்டையக் காலத்தில் இவ்வூர் மருதராசர் படைவீடு என்று அழைக்கப்பட்டது. சம்புவராயர்களின் தலைநகரமாகத் திகழ்ந்த இப்பகுதியில் 1992-1993 ஆம் ஆண்டில் வேட்டைகிரி பாளையம் மற்றும் கோட்டைக்கரை மேட்டுப் பகுதிகளில் அகழாய்வுப் பணிகள் நடத்தப்பட்டது.*
- *இந்த ஆய்வில் கட்டடப்பகுதியின் குடிநீர்க் கால்வாய்கள் மற்றும் வட்டக் கிணறுகள் முதற்கால கட்டத்தைச் (கி.பி. 13-14 வது நூற்றாண்டு சார்ந்தவையாகும். இரண்டாம் கால கட்டத்தைச் சார்ந்த (கி.பி. 14-16 ஆம் நூற்றாண்டு) புகைப்பான்கள், சுல்தான் காசுகள், அலங்கரிக்கப்பட்ட சிவப்பு வண்ணப் பானை ஓடுகள் மற்றும் வளையல் துண்டுகள் ஆகியவை அகழாய்வில் கண்டெடுக்கப்பட்டன.*

## *13.* திருத்தங்கல்

- *விருதுநகர் மாவட்டம், சிவகாசி வட்டத்தில் அமைந்துள்ள திருத்தங்கல் என்ற ஊர் சிவகாசியிலிருந்து 4 கி.மீ. தொலைவில் உள்ளது. தமிழ்க்காவியம் சிலப்பதிகாரத்தில் திருத்தங்கல், பண்டைய காலத்தில் ஒரு முக்கிய வாழ்விடமாகத் திகழ்ந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வூரின் மேற்கோடியில் அகழாய்வுக் குழிகள் போடப்பட்டுத் தொல்பொருட்கள் கண்டெடுக்கப்பட்டன. குழியில் 65 செ.மீக்கு கீழ் நுண் கற்காலக் கருவிகளும், மூலக்கற்களும் சேகரிக்கப்பட்து. கருப்பு மற்றும் சிவப்பு வண்ணப் பானை ஓடுகள் மேல் மட்டத்திலிருந்து 65 செ.மீ வரை இருப்பது அறியப்பட்டது.*
- *இவ்வகழாய்வின் கிண்ணங்கள், குறுகிய மற்றும் அகன்ற வாய் கொண்ட பானைகள், தட்டையான அடிப்பகுதி கொண்ட ஜாடி மற்றும் கிண்ணங்கள் போன்றவை கண்டெடுக்கப்பட்டன.*
- *ஸ்ரீவதஸக் குறியீடு கொண்ட களிமண்ணால் ஆன தொல்பொருகள் ஒன்று கண்டெடுக்கப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும். இங்கு அகழ்ந்தெடுக்கப்பட்ட இத்தொல்பொருட்கள் பெருங்கற்காலத்தைச் சார்ந்தவையாகும். (கி.மு 1000 முதல் கி.பி. 300 வரை).*

## *14. பூம்புகார்*

- *நாகப்பட்டினம் மாவட்டத்தில் சீர்காழி வட்டத்தில் காவேரி நதி கடலோடு சங்கமமாகும் இடத்தில் அமைந்துள்ளது பூம்புகார்.*
- *தமிழ்நாடு அரசுத் தொல்லியல் துறை, கிழார்வேளி மற்றும் தர்மகுளம் பகுதியில் அகழாய்வு மேற்கொண்டு அரிய தொல்பொருட்களை வெளிக் கொணர்ந்துள்ளது.*
- *கிழார்வெளி அகழாய்வில் சுமார் 20 செ.மீ. ஆழத்தில், இரண்டு செங்கற்சுவர்கள் வடகிழக்கு, தென்மேற்குத் திசையில் அமைந்திருந்தது வெளிப்படுத்தப்பட்டது. செங்கற்களை இணைக்க மென்மையான களிமண் பயன்படுத்தப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.*
- *மேடையுடன் கூடிய இச்சுவர்கள் இடைவெளி விட்டு அமைக்கப்பட்டுள்ளது. இவ்விடைவெளி ஆற்றுநீர் வந்து செல்வதற்காக அமைக்கப்பட்டிருக்கலாம். பனைமரத்துண்டு இரண்டும், இலுப்பை மரத்துண்டு இரண்டும் நான்கு மூலைகளில் செங்குத்தாக நடப்பட்டுள்ளது. இக்கட்டட அமைப்பு படகுத்துறையாக இருக்கலாம் என்று ஊகிக்கப்படுகிறது.*
- *கோவா தேதிய கடல் ஆராய்ச்சி நிறுவனத்துடன் இணைந்து, 1996-1997 ஆம் ஆண்டு இக்கடற்கரைப் பகுதியில் ஆழ்கடல் ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டது. ஆய்வில் ஈயக்கட்டிகள் சில கண்டெடுக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.*

## *15. மாளிகைமேடு*

- *கடலூர் மாவட்டம், பண்ருட்டி வட்டத்தில் அமைந்துள்ள மாளிகைமேடு என்ற ஊரில் 1999-2000 ஆண்டு அகழாய்வு நடத்தப்பட்டது. அகழாய்வின் மூலம் மூன்று காலகட்டப் பண்பாட்டைப் பிரதிபலிக்கும் முகமாகத் தொல்பொருட்கள் சேகரிக்கப்பட்டன.*
- *கருப்பு மற்றும் சிவப்பு வண்ணப் பானை ஓடுகள், சிவப்புப் பானை ஓடுகள், ரௌலட்டட் பானை ஓடுகள், எழுத்து பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் மற்றும் உஜ்ஜயின் குறியீடு கொண்ட செப்புக் காசு ஆகியவை அகழாய்வுக் குழியிலிருந்து கண்டெடுக்கப்பட்டன. கி.மு. 300 முதல் கி.பி. 1300 வரை இப்பகுதியில் மக்கள் வாழ்ந்தனர் என்பது தொல்லியல் சான்றுகளால் அறியப்படுகின்றது.*

## *16. மாங்குடி*

- *மாங்குடி கிராமம், திருநெல்வேலி மாவட்டம், சங்கரன்கோவில் வட்டத்தில் அமைந்துள்ளது. மதுரைக் காஞ்சியின் ஆசிரியர், மாங்குடி மருதனார் இவ்வூரில் பிறந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. கள ஆய்வின் போது, ரோமானியப் பானை ஓடுகள் கண்டெடுக்கப்பட்டன. தொல்லியல் துறை இப்பகுதியின் வரலாற்றை வெளிப்படுத்தும் நோக்கில் 2002 ஆம் ஆண்டில் அகழாய்வினை மேற்கொண்டது.*
- *நாயக்கர்புஞ்சை என்ற பகுதியில் பத்துக் குழிகள் போடப்பட்டு, நுண்கற்காலம் மற்றும் வரலாற்றுக் காலத்தைச் சார்ந்த சான்றுகள் வெளிப்படுத்தப்பட்டன. "குருமங்கள*

அதன் இ யானைய் போ" என்ற தமிழ் பிராமி பொறிக்கப்பட்ட கருப்பு மற்றும் சிவப்பு வண்ணப் பானை ஓடு கண்டெடுக்கப்பட்டது. இப்பானை ஓடு சங்ககாலத்தைச் சார்ந்தது என அறியப்படுகிறது. (கி.மு 200).

## 17. பேரூர்

- பண்டைக் காலத்தில் காஞ்சிப் பேரூர் என்று அழைக்கப்பட்ட இவ்வூர், கோயம்புத்தூர் மாவட்டத்தின் ஒரு முக்கிய மையப் பகுதியில் அமைந்துள்ளது. சாந்தலிங்க இராமசாமி அடிகளார் கல்லூரி வளாகத்திலுள்ள கள்ளிமேடு பகுதியிலும், திருநீற்றுமேடு பகுதியிலும் 2002 ஆம் ஆண்டு அகழாய்வு நடத்தப்பட்டது.
- முக்கிய தொல்பொருட்களாக, சுடுமண் முத்திரை ஒன்றில் வில், அம்பும் அவற்றின் இருபுறமும் விளக்குகளும், மேற் பகுதியில் பிறை நிலவின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளது. இது சேர மன்னனின் அரச முத்திரையாகும். மேலும், உத்திரபிரதேசம், மதுராவில் கண்டெடுக்கப்பட்ட சுடுமண் உருவத்தை ஒத்த சுடுமண் உருவத்தின் ஒரு பகுதி கண்டெடுக்கப்பட்டுள்ளது.
- இதன் காலம் கி.பி. 5-6 ஆம் நூற்றாண்டு ஆகும். அகழாய்வில் சங்கு வளையல் துண்டுகளும், வண்ண மணிகளும் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

## 18. தரங்கம்பாடி

- நாகபட்டினம் மாவட்டம் பொறையாறு வட்டத்தில் கிழக்கு கடற்கரையில் துறைமுகப்பட்டினமாக தரங்கம்பாடி திகழ்ந்துள்ளது. உப்பனாறு என்று அழைக்கப்படும் பொறையாறு, தரங்கம்பாடி கோட்டையின் தென் பகுதியில் வங்கக்கடலுடன் கலக்கிறது.
- இக்கோட்டை தஞ்சையை ஆண்ட ரகுநாத நாயக்க மன்னரிடம் டென்மார்க் அரசர் நான்காம் கிறிஸ்டியன் செய்து கொண்ட வணிக ஒப்பந்தத்தின்படி 1620-ல் டேனிஷ் கப்பல் படைத்தலைவர் ஒவ் ஜெட்டி என்பவரால் கடற்கரை அருகில் கட்டப்பட்டது. தங்கத்தினால் செய்யப்பட்ட ஏட்டில் எழுதப்பட்டுள்ள இந்த ஒப்பந்தத்தில் தரங்கம்பாடி கோட்டையை கட்டுவதற்கும், வரி வசூல் செய்வதற்கும் ஒப்புதல் வழங்கப்பட்டுள்ளது.
- இப்பெருமை வாய்ந்த டேனிஷ் கோட்டையினை 2008 மார்ச் மாதம் டேனிஷ் அரசானது தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை மற்றும் மத்திய தொல்லியல்துறையுடன் இணைந்து அகழாய்வு செய்தது. கோட்டையின் முன்பகுதியில் ஐந்து குழிகள் அமைக்கப்பட்டன. இக்கோட்டை அகழியின் மட்டம் வரை அகழாய்வு செய்யப்பட்டது. அகழியின் வெளிப்பக்கம் பெரிய மதில் சுவர் மற்றும் அகழியை கடந்து செல்வதற்கு மூன்று செங்கல் மேடைகளும், நுழைவாயிலை ஒட்டி செங்கல்லால் ஆன நடைபாதையும், அகழியில் உள்ள கல்மேடைகளை இணைப்பதற்கு மூடி திறக்கும் வகையில் மரப்பாலமும் இருந்தமை அகழாய்வில் கண்டறியப்பட்டன. அகழியின் அகலம் சுமார் 24 மீட்டர் ஆகும். இவ்வகழாய்வில் சீனமட்பாண்டங்கள், டென்மார்க்கில்

*தயாரிக்கப்பட்ட புகைப்பான்கள் ஆகியவை கண்டெடுக்கப்பட்டன.*

## 19. ராஜாக்கள்மங்கலம்

- *திருநெல்வேலி மாவட்டம், வள்ளியூரிலிருந்து 12 கி.மீ தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. இங்கு 2009-2010 ஆம் ஆண்டு அகழாய்வு நடைபெற்றது. ராஜாக்கள் மங்கலத்திலிருந்து 3 கி.மீ தொலைவில் நம்பியாற்றின் வடகரைகயில் அகழாய்விற்கான குழிகள் அமைக்கப்பட்டன.*
- *முற்கால பாண்டியரின் கட்டுமான கோயிலின் தடயங்கள் இவ்வகழாய்வில் வெளிப்பட்டது. கருங்கல்லான கோயில் அதிட்டானப் பகுதிகள், செங்கல் மற்றும் சுண்ணாம்பால் அமைந்த கட்டுமானப் பகுதிகள் அகழாய்வில் கிடைக்கப்பெற்றது. கருங்கல் சிலைகளும், சுதைச் சிற்பங்களும், கோயில் கட்டுமானப் பொருட்களுடன் கிடைத்தன. இங்கு கண்டெடுக்கப்பட்ட சிலைகள் மதுரை திருமலை நாயக்கர் அரண்மனையில் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.*

## 20. தலைச்சங்காடு

- *நாகப்பட்டினம் மாவட்டத்தில் தலைச்சங்காடு கிராமம் அமைந்துள்ளது. இவ்வூர் பண்டைய காலத்தில் பூம்புகாரின் ஒரு பகுதியாக விளங்கியது. இவ்விடத்தின் பாரம்பரியத்தை அறியும் நோக்கில் தமிழக பண்பாட்டினை தொல்லியல் துறையானது 2010 ஆம் ஆண்டு அகழாய்வு நடத்தியது.*
- *இவ்வூர் அரசு நடுநிலைப் பள்ளியில் அகழாய்வுக் குழிகள் அமைக்கப்பட்டன.*
- *இரும்புக்காலம் முதல் இடைக்காலம் வரையிலான மூன்று பண்பாட்டு காலங்கள் அகழாய்வின் மூலம் வெளிப்பட்டன. சில்லுகள், சுடுமண் விளக்கு, செங்கற்கள், கெண்டிகள், கூரை ஓடுகள், அலங்காரம் செய்யப்பட்ட பானை ஓடுகள் மற்றும் சுடுமண் உறை கிணறு ஆகியவை இவ்வகழாய்வில் கண்டறியப்பட்டன.*
- *பராந்தக சோழன் காலத்து கோயில் ஒன்றின் தடயங்கள் இவ்வகழாய்வில் வெளிப்பட்டது குறிப்பிடத்தக்கது. சுதை சிற்பங்கள் மற்றும் கல்வெட்டுகள் ஆகியவை இக்கோயில் அமைந்திருந்த இடத்தில் கண்டெடுக்கப்பட்டன.*

## 21. ஆலம்பரை

- *காஞ்சிபுரம் மாவட்டத்தைச் சார்ந்த இவ்வூர் சென்னையிலிருந்து 120 கி.மீ தொலைவில் கிழக்கு கடற்கரையில் அமைந்துள்ளது. இது பண்டைய நாட்களில் இடைக்கழி நாட்டுக்குட்பட்டதாக விளங்கியிருக்கிறது.*
- *பழங்காலத்தில் துறைமுகப்பட்டினமாக விளங்கிய மரக்காணம் இவ்வூருக்கு அருகில் உள்ளது. ஆலம்பறையில் கி.பி. 17-18 ஆம் நூற்றாண்டில் இருந்து வந்த சமூக பண்பாட்டை அறியும் நோக்கில் இங்குள்ள கோட்டைக்குட்பட்ட பகுதியில் அகழாய்வு நடைபெற்றது.*
- *மூன்று அகழாய்வுக்குழிகள் அமைக்கப்பட்டன. இதில் சுடுமண்ணாலான பொருட்கள்,*

செம்பு பொருட்கள், இரும்பு மற்றும் கண்ணாடியால் செய்யப்பட்ட தொல்பொருட்கள் கண்டெடுக்கப்பட்டன. கருங்கல்லினால் ஆன பீரங்கி குண்டுகள், ஃபோர்சிலைன் வகை ஓடுகள், தக்களி, சுடுமண் விளக்குகள், புகைப்பான் மற்றும் நாணயங்கள் செய்யும் சுடுமண்ணாலான அச்சுகளும் இவ்வகழாய்வில் கிடைத்தன.

- ஆலம்பரையில் கி.பி. 17-18-ம் நூற்றாண்டில் நடைபெற்ற வணிகம் குறித்த தடயங்களும், இங்கு வாழ்ந்த மக்களின் சமூக-கலாச்சார அம்சங்களையும் இவ்வகழாய்வானது வெளிப்படுத்தியது.

## 22. ஸ்ரீரங்கம்

- திருச்சியிலிருந்து 12 கி.மீ தொலைவில் காவேரி ஆற்றங்கரையில் ஸ்ரீரங்கம் அமைந்துள்ளது. இங்குள்ள ஸ்ரீரங்கம் அரங்கநாதர் கோயில் வளாகத்தில் 2013-2014, 2014-2015 ஆகிய இரு ஆண்டுகளில் அகழாய்வு நடைபெற்றது.
- இக்கோயில் 108 வைணவத்திருத்தலங்களில் ஒன்றாக விளங்குகிறது. சோழர், பாண்டியர், விஜயநகர மற்றும் நாயக்கர் காலம் என பல்வேறு கால கட்டங்களில் இக்கோயிலில் கட்டுமானப் பணிகள் நடைபெற்றுள்ளன. இங்குள்ள ஆயிரங்கால் மண்டபத்தின் அதிட்டானத்தில் அமைந்திருந்த புடைப்புச் சிற்பங்களை வெளிக்கொணரும் நோக்கில் 2013-2014ஆம் ஆண்டில் பண்பாட்டு அகழாய்வு நடைபெற்றது.
- இவ்வகழாய்வில் யானைச்சிற்பத்தின் பின்புறம் மனித உருவம் ஒன்று அங்குசம் போன்ற ஆயுதத்தினை கையில் பிடித்தவாறு நின்ற நிலையில் உள்ள சிற்பத்தொகுதி வெளிப்படுத்தப்பட்டது. யானையை அடக்கும் நிலையில் இக்காட்சி அமைந்துள்ளது. மேலும், அதிட்டானத்தின் கண்டப்பகுதியில் அரசியர் உட்பட பல்வேறு சிற்பத் தொகுதிகள் காணப்படுகின்றன.
- 2014-2015 ஆம் ஆண்டில் ஆயிரங்கால் மண்டபத்தின் மையப்பகுதியில் உள்ள நம்பெருமாள் மண்டபத்தின் கீழ்ப்பகுதியில் அகழாய்வு நடைபெற்றது. இம்மண்டபத்தின் அதிட்டானப்பகுதி சக்கரத்துடன் குதிரை இழுத்துச் செல்வது போல் உள்ளது. இதில் கீழ்ப்பகுதிகள் சிமெண்ட் தரையைக் கொண்டு மூடப்பட்ட நிலையில் இருந்ததால் அப்பகுதியினை நீக்கி அதிட்டானத்தை முழுவதுமாக வெளிக்கொணரும் நோக்கில் பண்பாட்டு அகழாய்வு நடைபெற்றது. சிமெண்ட் பகுதிகளை முழுவதுமாக நீக்கிய நிலையில் சக்கரத்தின் முழுப்பகுதியும், குதிரைச் சிற்பத்தின் அழகிய முழு உருவமும் வெளிக்கொணரப்பட்டன.



# தமிழர் இலக்கியங்கள்

தமிழ் இலக்கி வரலாற்றில் சங்ககாலம் என்பது, பெரும்பாலான ஆய்வாளரின் கணிப்புப்படி, கி.மு. 300 – கி.பி. 300 என்பது தெளிவாகியுள்ளது. இக்காலகட்டத்தையொட்டித் தோன்றிய இலக்கியங்கள் 'சங்க இலக்கியங்கள்' என வகைமை செய்யப்பட்டுள்ளன. அவற்றின் வகைமையும் தொகைமையும் பற்றி இவண் காண்போம்.

பத்துப்பாட்டும் எட்டுத்தொகையுமான பதினெட்டு நூல்களும் பதினெண் மேற்கணக்கு என அழைக்கப்படுகின்றன. பத்துப்பாட்டு என்பது, பத்து நெடிய ஆசிரியப் பாக்களால் ஆன பாடல் களின் தொகுப்பு. எட்டுத் தொகை என்பது, எட்டு தொகுப்பு நுல்களின் தொகுதி. இவற்றில் ஒவ்வொரு நூலிலும் நூற்றுக்கணக்கான சிறியதும் பெரியதுமான பாடல்கள் உள்ளன. பெரும்பாலும் இப்பாடல்கள் எல்லாம் ஆசிரியப் பாவிலேயே பயின்றுள்ளன. பதினெண் மேற்கணக்கு நூல்கள் எல்லாமே அகம்–புறம் என்ற இருவகை வாழ்வியற் பிரிவுகளாகக் கலந்து தொகுக்கப்பட்டுள்ளன.

**பத்துப்பாட்டு :-**

இத்தொகுப்பில் சரிபாதி நூல்கள் 'ஆற்றுப் படை' எனும் புறவகை இலக்கியங்கள். வறுமை யில் உழலும் புலவர் அல்லது கலைஞர் ஒருவரை வள்ளல்களிடமோ, தெய்வத்திடமோ வழிப்படுத்துவது (ஆற்றுப்படுத்துவது) ஆறு – வழி, இவ்வகை மரபாகும். பத்துப்பாட்டில் மிகப் பெரும்பாலான மதுரைக்காஞ்சி மற்றோர் புறநூலாகும். ஏனைய முல்லைப்பாட்டு, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, நெடுநல்வாடை ஆகிய நான்கும் அக நூல்களாகும்.

**எட்டுத்தொகை :-**

இத்தொகுப்பில், நற்றினை, குறுந்தொகை, அகநானுறு, கலித்தொகை ஆகிய ஐந்தும் அகம் சார்ந்தவை. பதிற்றுப்பத்தும் புறநானூறும் புறம் பேசுவன. பரிபாடல் அகம்புறம் இரண்டும் இணைந்து இலங்குவது. எட்டுத்தொகையின் மொத்த பாடல்கள் 2381. பாடிய புலவர்கள் 473 பேர்கள், கீழ்க்காணும் பட்டியல், பத்துப்பாட்டின் எட்டுத்தொகையின் தரவுகளை மாணவர்கள் விளங்கிக் கொள்ள ஏதுவாக இருக்கும்.

**பத்துப்பாட்டு**

| எண். | நூல் | புலவர் | பாடப்பட்டோர் | பாடல்கள் |
|---|---|---|---|---|
| 1. | திருமுருகாற்றுப்படை | நக்கீரர் | முருகன் | 317 |
| 2. | பொருநர் ஆற்றுப்படை | முடத்தாமக்கண்ணியார் | கரிகாலன் | 248 |
| 3. | சிறுபாண் ஆற்றுப்படை | நல்லூர் நத்தத்தனார் | நல்லியக்கோடன் | 269 |
| 4. | பெரும்பாணாற்றுப்படை | கடியலூர் உருத்திரங்கண்ணனார் | தொண்டைமான் இளந்திரையன் | 500 |
| 5. | கூத்தராற்றுப்படை (அ) மலைபடு கடாம் | பெருங்கௌசிகனார் | நன்னன் | 583 |
| 6. | நெடுநல் வாடை | நக்கீரர் | நெடுஞ்செழியன் (ஆரியப்படை) | 188 |
| 7. | குறிஞ்சிப்பாட்டு | கபிலர் | ---- | 261 |
| 8. | பட்டினப்பாலை | கடியலூர் உருத்திரங்கண்ணனார் | கவிக்காலன் | 301 |
| 9. | மதுரைக் காஞ்சி | மாங்குடி மருதனார் | நெடுஞ்செழியன் (தலையாலிங்கானம்) | 782 |
| 10. | முல்லைப்பாட்டு | நம்பூதனார் | ---- | 103 |

**எட்டுத்தொகை**

| எண். | நூல் | புலவர் | பாடப்பட்டோர் | பாடல்கள் |
|---|---|---|---|---|
| 1. | நற்றிணை | மாறன் வழுதி | 400 + திருமால் | 192 |
| 2. | குறுந்தொகை | பூரிக்கோ | 400 + முருகன் | 205 |
| 3. | ஐங்குறுநூறு | கூடலூர் கிழார் | 498 + சிவன் | 005 |
| 4. | கலித்தொகை | நல்லந்துவனார் | 140 + சிவன் | 005 |
| 5. | அகநானூறு | உருத்திரசன்மர் | 400 + சிவன் | 142 |
| 6. | புறநானூறு | உரத்திரசன்மர் | 399 + சிவன் | 157 |
| 7. | பதிற்றுப்பத்து | உருத்திரசன்மர் | 80 + சிவன் | 008 |
| 8. | பரிபாடல் | உருத்திரசன்மர் | 22 + 10 உதிரிகள் | 013 |

அனைத்து நூல்களுக்கும கடவுள் வாழ்த்து பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார்.

**சிறப்புச் செய்திகள்**

'அகநானூறு' நூலின் மற்றொரு பெயர் நெடுந்தொகை.

பாடலடிகள் : 13 – 31

பாடல்களின் தலைப்புகள் : 1 – 200 --- களிற்றயான நிரை

121 – 300 --- மணிமிடை பவளம்

301 – 400 --- நித்திலக் கோவை

ஒற்றைப் படை எணணில் முடிவன --- பாலைத்திணை

4, 14 . . . என முடிவன --- முல்லைத் திணை

2, 8, . . . என முடிவன --- குறிஞ்சித திணை

6, 16, . . . என முடிவன --- நெய்தல் திணை

**பதிற்றுப் பத்து : -**

| | புலவர் | அரசர் |
|---|---|---|
| 2 ஆம் பத்து | மெட்டூர்க் கண்ணனார் | இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் |
| 3 ஆம் பத்து | பாலை கௌதமனார் | பல்யானைச் செல்கெழு குட்டுவன் |
| 4 ஆம் பத்து | காப்பியாற்றுக் காப்பியனார் | நார்முடிச் சேரல் |
| 5 ஆம் பத்து | பரணர் | கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் |
| 6 ஆம் பத்து | காக்கைபாடினியார் | ஆடுகோபாட்டுச் சேரலாதன் |
| 7 ஆம் பத்து | கபிலர் | செல்வக் கடுங்கோ வாழியாதன் |
| 8 ஆம் பத்து | அரிசில் கிழார் | பெருஞ்சேரல் இரும்பொறை |
| 9 ஆம பத்து | பெருங்குன்றூர்க் கிழார் | இளஞ்சேல் இரும்பொறை |

**குறிஞ்சிப் பட்டு :**

கபிலரின் இந்நூலில் 99 வகை பூக்களின் பெயர்கள் பட்டியலிடப்பட்டுள்ளன.

**பட்டினப்பாலை :**

கரிகாலனின் துறைமுக நகரான புகார்நகரின் வணிகம், ஏற்றுமதி – இறக்குமதி விரிவாகப் பேசப்பட்டுள்ள நூல் இது.

பொதுவாக சங்கப்பாடல்கள் அனைத்தும் கிரேக்கத்தில் இலீயம், ஒடிஸி போன்ற வீரயுகப் பாடல் களின் சாயலுடன் விளங்குகின்றன. ஹோமர் கூறியதைப் போல காதலும் போருமாகச் சங்க இலக்கியங்கள் அகம்–புறம் என்ற வாழ்வியல் உணர்வுகளைப் பேசுகின்றன.

### சங்கம் மருவிய காலம் கி.பி. 3

- இக்கால சட்டத்தில் இயற்றப்பட்டதாக அல்லது தொகுக்கப்பட்டதாகக் கருதப்படும். 18 நூல்கள பதினேண் கீழ்க்கணக்கு நூல்கள் எனப்படும். அவைகள்: 12 : 5 : 1 என்ற விகிதத்தில் முறையே அறம் : அகம் : புறம் பற்றிப் பேசுவன.
- இவ்வரிசையில் முதலிடம் பெறும் நூல் திருக்குறள். பிற, நாலடியார், நான்மணிக்கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, ஏலாதி, திரிகடுகம், சிறுபஞ்சமூலம், பழமொழி, ஆசாரக் கோவை, முதுமொழி வெண்பா மற்றும் இன்னிலை, இவையனைத்தும் அறநூல்கள்.
- கார் நாற்பது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றம்பது, ஐந்திணை எழுபது மற்றும் கைஞ்நிலை என்ற ஐந்தும் அகநூல்கள். 'களவழி நாற்பது' எனற நூல் பொய்கையாரால் இயற்றப்பட்ட புறநூல், சேரமான் கனைக்கால்இரும்பொறை – கோச்செங்கணான் இடையே நடைபெற்ற போர் பற்றிப் பேசுகிறது. பெரும்பாலான நூல்கள் சமண முனிவராலும் சைவம் புலவராலும் பாடப்பட்டவை.

### இறையனார் களவியல் :

- இறையனார் என்ற புலவரால் இயற்றபபட் அகப்பொருள் நூல் இது. நக்கீரர் எழுதிய உரையுடன் இறையனார் அகப்பொருளுரையாக நமக்குக் கிடைக்கிறது. முச்சங்கம் பற்றிய அறிவிப்பைச் செய்த முதல் நூல் இது.

### தகடூர்யாத்திரை :

- பெயர் அதியாப் புலவர் எழுதிய இந்நூல் சங்ககாலத்தது எனக்கருதப்படுகிறது. உரையிடையிட்ட பாட்டாக 44 செய்யுட்களில், சேர அரசன் ஒருவன் தகடூரை ஆண்டுவந்த அதியமான் மேல் படையெடுத்தலைப் பற்றிப் பேசுகிறது.

### முத்தொள்ளாயிரம் :

- அகமும் புறமுமாகப் பேசும் இந்நூலின் 109 பாக்கள் மட்டுமே கிடைத்துள்ளன. கற்பனை நயமும் காதலும், வீரமும் எனச் சேரன், சோழன், பாண்டியன் என மூவேந்தர் புகழ்பாடும் நூல் இது, ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

### இரட்டைக்காப்பியங்கள்

- தமிழ் இலக்கிய வரலாற்றில் சிலப்பதிகாரம், மணிமேகலை இரண்டும் இரட்டைக் காப்பியங்ள் என அழைக்கப்படுகின்றன. நமது முதற் காப்பியங்கள் இவை. இக்கதைகளின் மாந்தர்கள் அரச மரபினரோ, தெய்வ நிலையினரோ அல்லர். சாதாரண மக்களின் பிரதிகளாகக் காப்பியத் தலைமை ஏற்கின்றனர்.
- முதல் காப்பியமான சிலப்பதிகாரம், சேரன் செங்குட்டுவனின் இளவல் இளங்கோவடிகளால் இயற்றப்பட்டது. மூன்று உயரிய நெறிகளான அரசியல், கற்பு, ஊடல் பற்றிப் பேசும் இக்காப்பியம், கோவலன் – கண்ணகியின வாழ்வு பற்றிப் பேசுகிறது. கோவலன் – மாதவியின்

மகள் மணிமேகலை பற்றிப் பேசும் மணிமேகலை நூல், சித்தலைச்சாத்தனரால் இயற்றப்பட்ட, புத்தமதப் பிரச்சார இலக்கியம். இந்நூலில் காணப்படும் மணிமேகலையி; போதனைகள் அகில உலகத்திற்குமான மகத்தான சித்தனைகள், உணவு, உடை, உறையுள் என மூன்றன் தேவையை உலகுக்கு உணர்த்திய பெருங்காப்பியம் இது.

"மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத் தோரே"

- என்பது இக்காப்பிய அறநெறி காலத்தால், கதைத்தொடர்பால் கதைமாந்தரின் கருதிக்கலப்பால், பாவகையால் இவையிரண்டும் இரட்டைக் காப்பியங்கள் என்றழைக்கப்படுகின்றன.
- ஆனால் சிலப்பு, சமயப் பொதுமை பேச, மணிமேகலையோ புத்தமதப் பெருமை பசும், சிலம்பு, நாட்டுப்புற மக்களின வாய்மொழி இலக்கியங்களுக்குக் காப்பிய ஏற்றம் தருகிறது மற்றும் சிவன், திருமால், கொற்றவை எனப் பரவும் சமய நிலையினை இந்நூலில் காணலாம். முதலாவது சமயச்சார்பற்றது; இரண்டாவது சமயம் சார்ந்தது.

## பக்தி இயக்கம் - சமய நூல்கள் - கி.பி. 600 - 900

- தமிழகத்தில் 400 ஆண்டு காலமாகச் செல்வாக்கு பெற்ற சமண – பௌத்த சமயங்களின் ஆதிக்கத்திற்கெதிராகச் சைவமும் வைணவமும் எழுந்த காலகட்டம் இது. கி.பி. ஆறாம் நூற்றாண்டில் காரைககாலம்மையாரின் வருகையுடன் தொடங்குகிறது. பக்தி இயக்கம், இதே காலகட்டத்தில் முதலாழ்வார்கள் எனப்படும் பொய்கையாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார் என் சைவமும் வைணவமும் தலையெடுத்தன.

### திருமந்திரம் :

- திருமூலர் என்ற ஆதிசித்தரால் இயற்றப்பட்ட 3000 பாடல்களின் தொகுப்பு இந்நூல். ஞானம், யோகம், தவம், மருத்துவம் எனப்பலப்படப் பேசும் இந்நூல் 'அன்பே சிவம்' என்றும் 'ஆசை அறுமின்கள்' என்றும் உலகியல் பேசுகிறது.
- காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி, இரட்டை மணிமாலை, மூத்த திருப்பதிகம் ஆகியன சிவனைச் செழுமைபடப் பாடுகின்றன.
- முதலாழ்வார்களின் திருவந்தாதிகள் முழுமையும் திருமாலையும் சிவனையும் ஒப்பவைத்துப் பாடிச் சமயப் பொதுமை பேசுகின்றன.

### தேவாரம்:

- சைவத்திருமுறைகள் பன்னிரண்டில் முதல் ஏழு திருமுறைகள் 'தேவாரவம்' என்ற தோத்திரப்பாடல்கள் ஆகும். முதல் மூன்று திருமுறைகள் திருஞானசம்பந்தராலும், 4, 5, 6 ஆம் திருமுறைகள் அப்பராலும், 7 ஆம் திருமுறை சுந்தரராலும் பாடப்பட்டன.
- மாணிக்கவாசகரின் திருவாசகமும் திருக்கோவையாகும் எட்டாம் திருமுறை.
- திருமாளிகைத் தேவர், கருவூரார் முதலிய ஒன்பதின்மர் பாடிய திருவிசைப்பா ஒன்பதும்

திருமுறை.

- திருமூலரின் திருமந்திரம் பத்தாம் திருமுறையாக, காரைக்காலம்மையார், பட்டினத்தடிகள் போன்றோரின் பாடல்கள் பதினோராம் திருமுறையார் உள்ளன.
- 63 நாயன்மார்கள் ஒன்பது தொகையடியார்களின் வரலாறு பேசும்.
- பெரியபராணம் சேக்கிழாரால் இயற்றப்பட்டது. இதுவே பன்னிரண்டாம் திருமுறையாகும். திருமுறைத் தொகுத்தவர் நம்பியாண்டர் நம்பி

**நாலாயிரத் திவ்விய பிரபந்தம்**

- பன்னிரண்டு ஆழவார்கள் பாடிய இந்நூல் நாதமுனிகளால் தொகுக்கப்பட்டது. முதல் ஆழ்வார்கள் மூவர் தவிர மற்றையோர் 7, 8, 9 ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்தவர்கள். பெரியாழ்வார் கண்ணன் குழந்தையாக்கித் தாலாட்ட அவர்கள் ஆண்டாள் ஆரங்கனைக் காதலனாக வரித்து நாச்சியார் திருமொழயும் திருப்பாவையும் பாடுகிறார். வேதம் தமிழ் செய்த மாறனாகிய நம்மாழ்வாரின் படைப்புகளும் திருவாசிரியம், திருவிருத்தம், திருவாய்மொழி, பெரிய திருவந்தாதி ஆகியன. இவரின் சீடர் மதுரகவி ஆழ்வார் தமது குரு நம்மாழ்வாரையே இறைவனாக எண்ணிப் போற்றுகிறார்.

## பக்தி இலக்கிய விளைவுகள்

கடவுள்முன் எல்லோரும் சமம். கடவுளே அனைவர்க்கும் தலைவர்.

தமிழ் இறைவனுக்கான மொழியானது.

அரண்மனை வாசலில் நின்ற மக்கள் கோயிலை நாடினர்.

அரண்மனையே கோயிலாக இருந்த நிலை மாறி, ஆலயவழிபாடு தலை தூக்கியது.

ஆலய கோபுரம் பிற எந்தக் கட்டத்திற்கும் உயரமானது.

அரண்மனைகளில் நடைபெற்ற விழாக்கள், கோயில் விழாக்களாக மாறின.

இறைவன்முன் சமத்துவமின்மை மறைந்தது.

**பலவகை நூல்கள் கி.பி.700-1300 நந்திக் கலம்பகம்**

- பெயர் அறியாப் புலவர் இயற்றிய இந்நூல், கலம்பக நூல்களின் முதன்மையானது. தெள்ளாறு எறிந்த மூன்றாம் நந்திவர்மன் மேல் பாடப்பட்ட சுவை மிகுந்த நூல் இது.
- 19ஆம் நூற்றாண்டில், பூண்டி அரங்கநாதர் இயற் 'கச்சிக் கலம்பக்' காஞ்சியின் பெருமை பேசியது.

**பாண்டிக் கோவை**

- கி.பி.6 அல்லது 7ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட இந்நூல், பாண்டியன் நெடுமாறனைப் புகழ்ந்தது. கோவை நூல்களில் இதுவே முதல் நூல்.

**பரணி**

- பதினோராம் நூற்றாண்டில், சோழன் குலோத்துங்ன் கலிங்கமன்னன் அனந்தபத்மன்

மீது படையெடுத்த நிகழ்வைப் பாடும் போர் நூல் இது. சோழனின் தளபதி யார் விளங்கும் கருணாகரத் தொண்டைமானின் வெற்றியைப் புகழ்ந்து ஜெயங்கொண்டார் பாடிய நூல், கலிங்கத்தப்பரண சந்தநயமும் காதலின் வீரமுமாகக் கலந்த பாடப்பட்ட நூல்

**உலா**

- சேரமான் பெருமான் நாயனார் இயற்றிய திருக்கைலாய ஞான உலாவே இவ்வகையில் முதல் நூல். இவர் சுந்தரரின் தோழர்; சேர அரச மரபினர். மூவர் உலா, சோழர்கள் குலோத்துங்கன், விக்கிரமன், இரண்டாம் இராசராசன் ஆகியோரைப் புகழ்ந்து பாடப் பெற்றது.

**தூது**

- சைவ சமயச் சான்றோர் இயற்றிய 'நெஞ்சு விடு தூது' சொக்கநாதரின் அழகர்கிள்ளை விடு தூது. பெயர் அறியாப் புலவர் இயற்றிய தமிழ்விடு தூது என்பன மிகச் சிறந்த தூது நூல்கள்.

**காப்பிய காலம் - கி.பி.500-1200**

- தமிழில் பெருந்தேவனார் பாடிய பாரதம் ஒன்று இருந்துள்ளது. பெருங்கதை, ஸ்ரீபுராண், சீவகசிந்தாமணி, சூடாமணி, வளையாபதி, குண்டலகேசி, நீலகேசி என்பன சமண–பௌத்த முனிவர்களால் இயற்றப்பட்டவை. மணநூல் என்றழைக்கப்படும் சீவக சிந்தாமணி திருத்தக்க தேவரால் இயற்றப்பட்டது. குண்டலகேசி புத்தமதக் காப்பியம்.

**கம்பன் காவியம்**

- வால்மீகியின் இராமாயணம், தமிழில்கம்பரால் இராமாதாரம்என்றபெயரில்உருவெடுத்தது. ஆறு காண்டங்கள், 10600 பாடல்களில் இராமகாதையைச் சொற் சிறப்புடனும் பொருட் சிறப்புடனும் நயம்படக் கம்பன் நகர்த்திச் சொல்லும் முறை வியக்கத்தக்கது. பிறன்மனை நோக்காமை, உலக சகோதரத்துவம் பற்றி விரிவாகப் பேசுவது கம்பராமாயணம்.

**அவ்வையார்**

- தமிழர்களுக்கு ஔவையார் என்றால் அலாதிப்பிரியம். படித்தவர் பாமரர் அறியாதவர் இலர். தமிழ்ப் பண்பாட்டில் ஔவையார் மூவர் உள்ளனர். 60க்கும் மேற்பட்ட செவ்வியல் பாடல்களைப் பாடிய சங்ககால ஔவையார் ஒருவரும் நாயன்மார் காலத்தவராகக் காட்டப்படும் ஔவையாப் பிறிது ஒருவர். சோழர் காலத்தில் வாழ்ந்து ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி பாடிய இன்னொரு ஒவையார்.

**இலக்கண நூல்கள்**

- நிகண்டுகள் வரிசையில் சூடாமணி, பிங்கலந்த, திவாகரம், காயாதசம் என்பன அகராதிகளாக உள்ளன. தொல்காப்பிய வழிநூலான நன்னூல் சமணர் பவணந்தியாரால் இயற்றப்பட்டது. உவமை–உருவக அணிகளின் பட்டியலைச் சான்றுகளுடன் தரும் தண்டியலங்காரம், 'காவ்யாதர்சம்' என்ற வடமொழி நூலின் வழிநூலாகும்.

- யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்பன பாட்டிலக்கண நூல்கள், நன்னூலைத் தொடர்ந்து நேமிநாதம், வீரசோழியம், வச்சணந்தி மாலை என்பன இலக்கண பனுவல் கள்.

**சமய நூல்கள் (கி.பி.1100-1700)**

- பிற்கால நாயக்கர்கள் ஆட்சிக்காலம், அதன் பிற்பாடு என அக்காலகட்டத்தில் எண்ணற்ற தமிழ் நூல்கள் தோன்ன சந்த நயம் மிக்க 'திருப்புகழ்' அருணகிரிநாதரால் பாடப்பட்டது. கவிகாளமேகம் பல்வேறு தனிப்பார்களைப்பாடியுள்ளார். குமரகுருபரர் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ். நீதிநெறி விளக்கம், சகலகலா வல்லிமாலை ஆகியன பாடியுள்ளார்

**சித்தர்கள்**

- பதினெண் சித்தர்கள் வரிசையில் திருமூலர் ஆதி சித்தராக அறியப்பட, அக்திஸ்தியர், குதம்பைச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர், அழுணிச்சித்தர், போகர், கடுவெளிச் சித்தர் என்போர் புகழ்மிக்கவர். சமயம், தவம், ஞானம், யோகம், இறை, பக்தி பற்றி இவர்கள் பாடின பொருட்சிறப்பு மிக்கன.

**சைவ சித்தாந்தம்**

- தேவாரப் பாடல்கள் தோத்திரப் பாடல்களாக விளங்க, கி.பி.12, 13, 14ஆம் நூற்றாண்டுளில் தோன்றிய சாத்திரங்கள் சைவத்த விளக்க எழுந்தவை.
- அவைகள்:

| | |
|---|---|
| திருவுந்தியார் | தேவநாயனார் |
| சிவஞானபேதம் | மெய்கண்டார் |
| சிவஞான சித்தியார் | அருள்நந்தி சிவம் |
| சிவப்பிரகாசம் | உமாபதி சிவம் |
| உண்மை விளக்கம் | மணவாசகம கடந்தார் |

**தஞ்சை கோவை**

- பொய்யா மொழியாரால் இயற்றப்பட்ட அகப்பொருள் நூல் இது.

**உரையாசிரியர்கள்**

நக்கீரனின் இறையனார் களவியில் உரை அகப்பொருள் துறைகளை அலசுகிறது.

| | |
|---|---|
| இளம்பூரணர் | தொல்காப்பியம் முழுமைக்கும் |
| பேராசிரியர் | தொல். எழுத்ததிகாரம், திருக்கோவையார் |
| சேனாவரையார் | தொல். சொல்லதிகாரம் |
| அடியார்க்கு நல்லார் | சிலப்பதிகாரம் |
| மணக்குடவர் | திருக்குறளின் முதல் உரையாசன் |
| பரிமேலழகர் | திருக்குறள், பரிபாடல் |

| | |
|---|---|
| மயிலைநாதர் | நன்னூல் |
| நச்சினாக்கினியர் | சீவக சிந்தாமணி |
| பெரிய வாச்சான் பிள்ளை | நாலாயிரத் திவ்விய பிரபந்தம் |

**தலபுராணங்கள்**

| | |
|---|---|
| கோவில் புராணம் | உமாபதிசிவம் |
| திருவிளையாடற் புராணம் | பரஞ்சோதி |
| காசிக்காண்டம் | அதிவீரராம பாண்டியர் |
| சிதம்பர புராணம் | திருமலை நாதர் |

கி.பி.16ஆம் நூற்றாண்டில், புகழேந்திப் புலவர், நளதமயந்தி கதையை 'நளவெண்பா' எனப் பாடினார்.

ஈசான தேசிகர் என்கிற சாமிநாத தேசிகர் 'இலக்கணக் கொத்து' என்ற நூலை இயற்றினார்.

**மற்றவை : -**

இஸ்லாமியக் காவியமான உமறுப்புலவரின் சீறாப் புராணம் இறைதூதர் நடிகர் நாயகத்தின் வரலாற்றைப் பாடிய. 5027 பாடல்களைக் கொண்டது.

திரிகூடராசப்பக் கவிராயரின் 'திருக்குற்றாலக் குறவஞ்சி' புகழ்மிக்க நாடக இலக்கியம்

முக்கூடற் பள்ளு – என்னயினாப் புலவர்

தேம்பாவணி – வீரமாமுனிவர்

இராம நாடகம் – அருணாசலக் கவிராயர்

தமிழிசை மூவர் – அருணாசலக் கவிராயர், முத்துத் தாண்டவர், மாரிமுத்துப் பிள்ள

முதல் தமிழ் அச்சு நூல் – விவிலீயம்

சுதேசிமித்திரன் (நாளிதழ்) – 1880

சமரச சுத்த சன்மார்க்க சங்கம் – 1865

ஜோதி வழிபாடு – 1872, வடலூரில்

சத்திய தருமச்சாலை – 1867, வடலூரில்

வள்ளலார் அவதாரநாள் – 1823, அக். 5

வள்ளலாரின் ஆறுதிருமுறைகளின் தொகுப்பு – திருவருட்பா

இரட்சணிய யாத்திரிகம் – எச்.ஏ. கிருட்டிணப்பிள்ளை

முதல் தமிழ்ப் புதினம் – பிரதாப் முதலியார் சரித்திரம் / மாயூரம் வேதநாயகம் பிள்ளை

**இருபதாம் நூற்றாண்டு**

காஞ்சிபுராணம், திலகர் மாண்மியம் வள்ளலார் சரித்திரம் – அமலாம்பிகை அம்மையார்

மலைக்கள்ளன், அவனும் அவளும் (நாவல்கள்) – நாமக்கல் கவிஞர்

தமிழ் வேர்ச்சொல். அகராதி – ஞா. தேவநேயப் பாவணார்

சிறுகதை மன்னன் – புதுமைப் பித்தன், அகலீகை, சாபவிமோசனம், ஒரு நாள் கழிந்தது, கடவுளும் கந்தசாமிப்பிள்ளையும்.

கல்கி – வரலாற்று நாவல்கள் – பார்த்திபன் கனவு, பொன்னியின் செல்வன், தியாக பூமி, சிவகாமியின் செல்வன்.

டாக்டர் மு.வ. – 18 நாவல்கள் – கள்லோ காவியமோ, கசித்துகி நெஞ்சில் தெமுள். டாக்டர் அல்லி (நாடகம்)

ஆனந்த விகடன் – நகைச்சுவை வார இதழ், உ.வே.சா.வின் சுயசரிதை 'என் சரிதம்' கொத்த மங்களம் சுப்புவின் தில்லபாடி மோகனாம்பாள் தொடர்களாக வெளிவந்த இதழ்.

தமிழிசை இயக்கம் , 1943 இல் இராஜா சர். அண்ணாமலை அரசரால் தொடங்கப்பட்டது.

கருணாமிர்தசாகரம் – இசைநூல் – தஞ்சை அபிராஹாம் பண்டிதர்.

தமிழ் நாடகத் தலைமை ஆசிரியர் – தவத்திரு சங்காரதாச சுவாமிகள்

தமிழ் நாடகத் தந்தை – பம்மல் சம்பந்தனார்.

நான் கண்ட பாரதம் – அம்புஜத்தம்மாள்

1978 இல், பெரியாரின் எழுத்துச் சீர்திருத்தம் தமிழக அரசால் அங்கீகரிக்கப்பட்டது.

மகாகவி பாரதி – கண்ணன் பாட்டு, குயில்பாட்டு, பாஞ்சாலி சபதம்

பாரதிதாசன் – குடும்ப விளக்கு, இருண்ட வீடு, கண்ணகி புரட்சிக் காப்பியம், அழகின் சிரிப்பு

கண்ணதாசன் – ஏசு காவியம், சேரமான் காதலி, ஆட்டனத்தி ஆதிமந்தி

வாணிதாசன் – கபிஞர் ஏறு (சிறப்புப் பெயர்) தமிழ் நாட்டின் வேர்ட்ஸ்வார்த்

பெருஞ்சித்திரனார் – பாவலர் ஏறு

முடியரசன் – திராவிட நாட்டின் வானம்பாடி

புதுக்கவிதையின் முன்னோடி – நா.பிச்சமூர்த்தி

எழுத்து – கவிதையிதழ் – சி.சு. செல்லப்பா

சைவத்தின் கொள்கை – அன்பே சிவம்

வைணவத்தின் கொள்கை – சரணாகதி

தமிழ் நூல்களை முதலில் அச்சுக்குக் கொண்டு வந்தவர் சீகன் பால்கு.

திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் – ராபர்ட் கால்டுவேல்

உ.வே.சா.வின் தமிழ்ப்பணியைப் பாராட்டியவர் – ஜீலியன் வில்சன்

ஆதி சங்கரரால் 'திராவிட சிசு' என்றழைக்கப்பட்டவர், திருஞான சம்பந்தர்.

முதல் தமிழ் நாவல் – பிரதாப முதலியார் சரித்திரம் – மாயூரம் வேத நாயகம் பிள்ளை

ஆண்டாள் புகழ்பாடும் கிருஷ்ணதேவராயரின் நூல் ஆமுக்தமால்யதா

தமிழ்நாட்டின் முதல் அரசவைக் கவி:ஞர் – நாமக்கல் கவிஞர்

தென்னிந்தியாவின் ஆக்ஸ்போர்டு – பாளையங்கோட்டை

திருக்குறள் முதன் முதல் அச்சில் ஏற்றப்பட்ட ஆண்டு 1812.
'திருக்குறளுக்கு இணையான இலக்கியம் உலகின் எங்கும் இல்லை' – ஆல்பர்ட் சுவைட்சர்

'தமிழ் பேல விரிவாக ஆக்கப் பெற்ற இலக்கியங்கள எம்மொழியிலும் இல்லை' – கமில் சுவலபில்
பாரதியாரின் உரைநடைள் : தராசு, ஞானரதம், சந்திரிகையின் கதை
பெரியாரின் இதழ்கள் குடியரசு, விடுதலை, புரட்சி
அகிலனின் நாவல் 'சித்திரப்பாவை' 1975 ல் இந்திய உயர் இலக்கிய விருதான 'ஞான பீடம்' பெற்றது.
தனது வாழ்நாள் இலக்கியம் பங்களிப்பிற்காக 'ஞானபீடம்' விருது வழங்கப்பெற்ற எழுத்தாளர், ஜெயகாந்தன்

| படைப்பு | சாகித்திய அகாடமி விருது |
|---|---|
| சேரமான் காதலி (நாவல்) | கணணதாசன் |
| சில நேரங்களில் சில மனிதர்கள் (நாவல்) | ஜெயகாந்தன் |
| வள்ளலார் கண்டஒருமைப்பாடு (நூல்) | ம.பொ. சிவஞானம் |
| ஆகாயத்துக்கு அடுத்தவீடு | மு.மேத்தா |
| பிசிராந்தையார் | பாரதிதாசன் |
| சகாராவைத் தாண்டாத ஒட்டகங்கள் | நா. காமராசன் |
| கள்ளிக காட்டு இதிகாசம் (நாவல்) | வைரமுத்து |
| வேரில் பழுத்தபலா (நாவல்) | சு. சமுத்திரம் |
| வேருக்கு நீர் | இராஜம் கிருஷ்ணன் |
| சாய்வு நாற்காலி | தோப்பில் முகம்மது மீரான் |
| புதிய உரைநடை | டாக்டர். எழில் முதல்ன் |
| தோல் (நாவல்) | செல்வராஜ் |
| அஞ்ஞாடி | பூமணி |
| நிலம் பூத்து மலர்ந்த நாள் (மொழிபெயர்ப்பு) | P.V.ஜெயஸ்ரீ |

**புதிய நூல்கள்**

ஒரு நாகரிகத்தின் பயணம் : சிந்துவெளி முதல் வைணவம் வரை – R. பாலகிருஷ்ணன IAS
Early Indians - டானி ஜோசப்

# திருக்குறள்

## கடவுள் வாழ்த்து

**அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே உலகு**

**விளக்கம்:** *எழுத்துக்கள் எல்லாம் அகரத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. அது போல, உலகம் கடவுளை அடிப்படையாக கொண்டிருக்கிறது.*

**கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்**

**விளக்கம்:** *தூய அறிவு வடிவாக விளங்கும் இறைவனுடைய நல்ல திருவடிகளைத் தொழாமல் இருப்பாரானால், அவர் கற்ற கல்வியினால் ஆகிய பயன் என்ன?*

**மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடுவாழ் வார்**

**விளக்கம்:** *அன்பரின் அகமாகிய மலரில் வீற்றிருக்கும் கடவுளின் சிறந்த திருவடிகளை பொருந்தி நினைக்கின்றவர், இன்ப உலகில் நிலைத்து வாழ்வார்.*

**வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு**
**யாண்டும் இடும்பை இல**

**விளக்கம்:** *விருப்பு வெறுப்பு இல்லாத கடவுளின் திருவடிகளை பொருந்தி நினைக்கின்றவர்க்கு எப்போதும் எவ்விடத்திலும் துன்பம் இல்லை.*

## வான்சிறப்பு

**விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து**
**உள்நின்று உடற்றும் பசி**

**விளக்கம்:** *மழை பெய்யாமல் பொய்த்திடுமானால், கடல் சூழ்ந்த அகன்ற உலகமாக இருந்தும், பசி உள்ளே நிலைத்து நின்று உயிர்களை வருத்தும்.*

**ஏரின் உழாஅர் உழவர் புயல்என்னும்**
**வாரி வளங்குன்றிக் கால்.**

**விளக்கம்:** *மழை என்னும் வருவாய் வளம் குன்றி விட்டால், (உணவுப் பொருள்களை உண்டாக்கும்) உழவரும் ஏர் கொண்டு உழமாட்டார்.*

**கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே**
**எடுப்பதூஉம் எல்லாம் மழை**

**விளக்கம்:** *பெய்யாமல் வாழ்வைக் கெடுக்க வல்லதும் மழை; மழையில்லாமல் வளம் கெட்டு நொந்தவர்க்கும் துணையாய் அவ்வாறே காக்க வல்லதும் மழையாகும்.*

## நீத்தார் பெருமை

**துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து**
**இறந்தாரை எண்ணிக்கொண் டற்று.**

**விளக்கம்:** *பற்றுக்களைத் துறந்தவர்களின் பெருமையை அளந்து கூறுதல், உலகத்தில் இதுவரை பிறந்து, இறந்தவர்களை கணக்கிடுவதைப் போன்றது.*

**செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்**
**செயற்கரிய செய்கலா தார்.**

**விளக்கம்:** *செய்வதற்கு அருமையான செயல்களை செய்ய வல்லவரே பெரியோர். செய்வதற்கு அரிய செயல்களைச் செய்யமாட்டாதவர் சிறியோர்.*

**சுவைஒளி ஊறுஓசை நாற்றமென ஐந்தின்**
**வகைதெரிவான் கட்டே உலகு.**

**விளக்கம்:** *சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்று சொல்லப்படும் ஐந்தின் வகைகளையும் ஆராய்ந்து அறிய வல்லவனுடைய அறிவில் உள்ளது உலகம்*

## அரன் வலியுறுத்தல்

**சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு**
**ஆக்கம் எவனோ உயிர்க்கு.**

**விளக்கம்:** *அறம் சிறப்பையும் அளிக்கும்: செல்வத்தையும் அளிக்கும்: ஆகையால் உயிர்க்கு அத்தகைய அறத்தை விட நன்மையானது வேறு யாது?*

**ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே**
**செல்லும்வாய் எல்லாஞ் செயல்.**

**விளக்கம்:** *செய்யக்கூடிய வகையால், எக்காரணத்தாலும் விடாமல் செல்லுமிடமெல்லாம் அறச்செயலைப் போற்றிச் செய்ய வேண்டும்.*

**அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**
**இழுக்கா இயன்றது அறம்.**

**விளக்கம்:** *பொறாமை, ஆசை, சினம், கடுஞ்சொல் ஆகிய இந்த நான்கு குற்றங்களுக்கும் இடங்கொடுக்காமல் அவற்றைக் கடித்து ஒழுகுவதே அறமாகும்.*

## மக்கட்பேறு/புதல்வரைப் பெறுதல்

**தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க் கெல்லாம் இனிது.**

**விளக்கம்:** *தம் மக்களின் அறிவுடைமை தமக்கு இன்பம் பயப்பதை விட, உலகத்து உயிர்களுக்கேல்லாம் மிகுந்த இன்பம் பயப்பதாகும்.*

**குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்**
**மழலைச்சொல் கேளா தவர்.**

**விளக்கம்:** *தம் மக்களின் மழலைச் சொல்லைக் கேட்டு அதன் இனிமையை நுகராதவரே, குழலின் இசை இனியது, யாழின் இசை இனியது என்று கூறுவர்.*

**எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்**
**பண்புடை மக்கட் பெறின்.**

**விளக்கம்:** *பழி இல்லாத நல்ல பண்பு உடைய மக்களைப்பெற்றால் ஒருவனுக்கு ஏழு பிறவியிலும் தீவினைப் பயனாகிய துன்பங்கள் சென்று சேரா.*

## அன்புடைமை

**அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறர்க்கு.**

***விளக்கம்:*** *அன்பு இல்லாதவர் எல்லாப் பொருள்களையும் தமக்கே உரிமையாகக் கொண்டு வாழ்வார்: அன்பு உடையவர் தம் உடமையும் பிறர்க்கு உரிமையாக்கி வாழ்வர்.*

**அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறர்க்கு.**

***விளக்கம்:*** *அன்பு இல்லாதவர் எல்லாப் பொருள்களையும் தமக்கே உரிமையாகக் கொண்டு வாழ்வார்: அன்பு உடையவர் தம் உடமையும் பிறர்க்கு உரிமையாக்கி வாழ்வர்.*

**அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு.**

***விளக்கம்:*** *அன்பின் வழியில் இயங்கும் உடம்பே உயிர் நின்ற உடம்பாகும்: அன்பு இல்லாதவர்க்கு உள்ள உடம்பு எலும்பைத் தோல் போர்த்த வெற்றுடம்பே ஆகும்*

**என்பி லதனை வெயில்போலக் காயுமே**
**அன்பி லதனை அறம்.**

***விளக்கம்:*** *எலும்பு இல்லாத உடம்போடு வாழும் புழுவை வெயில் காய்ந்து வருத்துவது போல், அன்பு இல்லாத உயிரை அறம் வருத்தும்.*

## விருந்தோம்பல்

**விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா**
**மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.**

***விளக்கம்:*** *விருந்தினராக வந்தவர் வீட்டின் புறத்தே இருக்கத் தான் மட்டும் உண்பது சாவா மருந்தாகிய அமிழ்தமே ஆனாலும் அது விரும்பத்தக்கது அன்று.*

**இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்**
**துணைத்துணை வேள்விப் பயன்.**

***விளக்கம்:*** *விருந்தோம்புதலாகிய வேள்வியின் பயன் இவ்வளவு என்று அளவு படுத்தி கூறத்தக்கது அன்று, விருந்தினரின் தகுதிக்கு ஏற்ற அளவினதாகும்.*

**பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி**
**வேள்வி தலைப்படா தார்.**

**விளக்கம்:** விருந்தினரை ஓம்பி அந்த வேள்வியில் ஈடுபடாதவர் பொருள்களை வருந்திக்காத்துப் (பின்பு இழந்து) பற்றுக்கொண்டு இழந்தோமே என்று இரங்குவர்.

## இனியவை கூறல்

**துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்**
**இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.**

**விளக்கம்:** யாரிடத்திலும் இன்புறத்தக்க இன்சொல் வழங்குவோர்க்குத் துன்பத்தை மிகுதிபடுத்தும் வறுமை என்பது இல்லையாகும்.

**பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு**
**அணியல்ல மற்றுப் பிற.**

**விளக்கம்:** வணக்கம் உடையவனாகவும், இன்சொல் வழங்குவோனாகவும் ஆதலே ஒருவனுக்கு அணிகலனாகும் மற்றவை அணிகள் அல்ல.

**இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ**
**வன்சொல் வழங்கு வது.**

**விளக்கம்:** இனிய சொற்கள் இன்பம் பயத்தலைக் காண்கின்றவன், அவற்றிற்கு மாறான வன்சொற்களை வழங்குவது என்ன பயன் கருதியோ?

## செய்ந்நன்றி அறிதல்

**செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்**
**வானகமும் ஆற்றல் அரிது.**

**விளக்கம்:** தான் ஓர் உதவியும் முன் செய்யாதிருக்கப, பிறன் தனக்கு செய்த உதவிக்கு மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் கைமாறாகக் கொடுத்தாலும் ஈடு ஆக முடியாது.

**பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்**
**நன்மை கடலின் பெரிது.**

**விளக்கம்:** இன்ன பயன் கிடைக்கும் என்று ஆராயாமல் ஒருவன் செய்த உதவியின் அன்புடைமையை ஆராய்ந்தால் அதன் நன்மை கடலைவிட பெரியதாகும்.

**தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்**
**கொள்வர் பயன்தெரி வார்.**

**விளக்கம்:** *ஒருவன் தினையளவாகிய உதவியைச் செய்த போதிலும், அதன் பயனை ஆராய்கின்றவர், அதனையே பனையளவாகக் கொண்டு போற்றுவர்.*

## நடுவு நிலைமை

**நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை**
**அன்றே யொழிய விடல்.**

**விளக்கம்:** *தீமை பயக்காமல், நன்மையே தருவதானாலும் நடுவு நிலைமை தவறி உண்டாகும் ஆக்கத்தை அப்போதே கைவிட வேண்டும்.*

**கெடுவாக வையாது உலகம் நடுவாக**
**நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.**

**விளக்கம்:** *நடுவுநிலைமை நின்று, அறநெறியில் நிலைத்து வாழகின்றவன் அடைந்த வறுமை நிலையைக் கேடு என கொள்ளாது உலகு.*

**சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால்**
**கோடாமை சான்றோர்க் கணி.**

**விளக்கம்:** *முன்னே தான் சமமாக இருந்து, பின்பு பொருளைச் சீர்தூக்கும் துலாக்கோல் போல் அமைந்து, ஒரு பக்கமாக சாயாமல் நடுவுநிலைமை போற்றுவது சான்றோர்க்கு அழகாகும்.*

## அடக்கமுடைமை

**செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து**
**ஆற்றின் அடங்கப் பெறின்.**

**விளக்கம்:** *அறிய வேண்டியவற்றை அறிந்து, நல்வழியில் அடங்கி ஒழுகப்பெற்றால், அந்த அடக்கம் நல்லோரால் அறியப்பட்டு, மேன்மை பயக்கும்.*

**நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்**
**மலையினும் மாணப் பெரிது.**

**விளக்கம்:** *தன் நிலையிலிருந்து மாறுபடாமல் அடங்கி ஒழுகுவோனுடைய உயர்வு, மலையின் உயர்வை விட மிகவும் பெரிதாகும்.*

**ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்**
**எழுமையும் ஏமாப் புடைத்து**

**விளக்கம்:** *ஒரு பிறப்பில், ஆமை போல் ஐம்பொறிகளையும் அடக்கியாள வல்லவனானால், அஃது அவனுக்குப் பல பிறப்பிலும் காப்பாகும் சிறப்பு உடையது.*

## ஒழுக்கமுடைமை

**பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்**
**தேரினும் அஃதே துணை.**

**விளக்கம்:** *ஒழுக்கத்தை வருந்தியும் போற்றிக் காக்க வேண்டும்; பலவற்றையும் ஆராய்ந்து போற்றித் தெளிந்தாலும், அந்த ஒழுக்கமே வாழ்க்கையில் துணையாக விளங்கும்.*

**அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன்று இல்லை**
**ஒழுக்க மிலான்கண் உயர்வு.**

**விளக்கம்:** *பொறாமை உடையவனிடத்தில் ஆக்கம் இல்லாதவாறு போல, ஒழுக்கம் இல்லாதவனுடைய வாழ்க்கையில் உயர்வு இல்லையாகும்.*

**உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்**
**கல்லார் அறிவிலா தார்.**

**விளக்கம்:** *உலகத்து உயர்ந்தவரோடு பொருந்த ஒழுகும் முறையைக் கற்காதவர், பல நூல்களைக் கற்றிருந்த போதிலும் அறிவில்லாதவரே ஆவர்.*

## அரன் வலியுறுத்தல்

**அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்**
**புறத்த புகழும் இல.**

**விளக்கம்:** *அறநெறியில் வாழ்வதன் பயனாக வருவதே இன்பமாகும். அறத்தோடு பொருந்தாமல் வருவன எல்லாம் இன்பம் இல்லாதவை, புகழும் இல்லாதவை*

**சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு**
**ஆக்கம் எவனோ உயிர்க்கு.**

**விளக்கம்:** *அறம் சிறப்பையும் அளிக்கும்: செல்வத்தையும் அளிக்கும்: ஆகையால் உயிர்க்கு அத்தகைய அறத்தை விட நன்மையானது வேறு யாது?*

## பிறனில் விழையாமை

**பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து**
**அறம்பொருள் கண்டார்கண் இல்.**

**விளக்கம்:** *பிறனுடைய உரிமையாகிய மனைவியை விரும்பி நடக்கும் அறியாமை, உலகத்தில் அறமும், பொருளும் ஆராய்ந்து கண்டவரிடம் இல்லை.*

**எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்**
**தேரான் பிறனில் புகல்.**

**விளக்கம்:** *தினையளவும் ஆராய்ந்து பார்க்காமல் பிறனுடைய மனைவியிடம் செல்லுதல், எவ்வளவு பெருமையை உடையவராயினும் என்னவாக முடியும்?*

**அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்**
**பெண்மை நயவா தவன்.**

**விளக்கம்:** *அறத்தின் இயல்போடு பொருந்தி இல்வாழ்க்கை வாழ்பவன், பிறனுக்கு உரிமையானவளின் பெண் தன்மையை விரும்பாதவனே.*

## பொறையுடைமை

**பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை**
**மறத்தல் அதனினும் நன்று.**

**விளக்கம்:** *வரம்பு கடந்து பிறர் செய்யும் தீங்கை எப்போதும் பொறுக்க வேண்டும்; அத் தீங்கை நினைவிலும் கொள்ளாமல் மறந்து விடுதல் பொறுத்தலை விட நல்லது.*

**ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்**
**பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.**

**விளக்கம்:** *(தீங்கு செய்தவரைப்) பொறுக்காமல் வருத்தினவரை உலகத்தார் ஒரு பொருளாக மதியார்; ஆனால், பொறுத்தவரைப் பொன்போல் மனத்துள் வைத்து மதிப்பர்.*

**மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்**
**தகுதியான் வென்று விடல்.**

**விளக்கம்:** *செருக்கினால் தீங்கானவற்றைச் செய்தவரைத் தாம் தம்முடைய பொறுமைப் பண்பினால் பொறுத்து வென்று விட வேண்டும்.*

## அழுக்காறாமை

**ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து**
**அழுக்காறு இலாத இயல்பு.**

**விளக்கம்:** *ஒருவன் தன் நெஞ்சில் பொறாமை இல்லாமல் வாழும் இயல்பைத் தனக்கு உரிய ஒழுக்க நெறியாகக் கொண்டு போற்ற வேண்டும்.*

**அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்**
**ஏதம் படுபாக்கு அறிந்து.**

**விளக்கம்:** *பொறாமைப்படுதலாகிய தவறான நெறியில் துன்பம் ஏற்படுதை அறிந்து, பொறாமை காரணமாக அறமல்லாதவைகளைச் செய்யார் அறிவுடையோர்.*

**அழுக்கற்று அகன்றாரும் இல்லை அஃதுஇல்லார்**
**பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல்.**

**விளக்கம்:** *பொறாமைப்பட்டுப் பெருமையுற்றவரும் உலகத்தில் இல்லை; பொறாமை இல்லாதவராய் மேம்பாட்டிலிருந்து நீங்கியவரும் இல்லை.*

## வெஃகாமை

**சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே**
**மற்றின்பம் வேண்டு பவர்.**

**விளக்கம்:** *அறநெறியால் பெறும் இன்பத்தை விரும்புகின்றவர், நிலையில்லாத சிறிய இன்பத்தை விரும்பி அறம் அல்லாதவற்றைச் செய்யார்.*

**அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்**
**பொல்லாத சூழக் கெடும்.**

**விளக்கம்:** *அருளை விரும்பி அறநெறியில் நின்றவன், பிறனுடைய பொருளை விரும்பிப் பொல்லாத குற்றங்களை எண்ணினால் கெடுவான்.*

**அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்**
**திறன்அறிந் தாங்கே திரு.**

**விளக்கம்:** *அறம் இஃது என்று அறிந்து பிறர் பொருளை விரும்பாத அறிவுடையாரைத் திருமகள் தான் சேரும் திறன் அறிந்து அதற்கு ஏற்றவாறு சேர்வாள்.*

## புறங்கூறாமை

**அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்**
**புறங்கூறான் என்றல் இனிது.**

**விளக்கம்:** ஒருவன் அறத்தைச் சொல்லாமல் பாவமே செய்தாலும், அடுத்தவரைப் பற்றிப் புறம் பேசமாட்டான் என்றால் அதுவே அவனுக்கு நல்லது.

**புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்**
**அறங்கூற்றும் ஆக்கத் தரும்.**

**விளக்கம்:** புறங்கூறிப் பொய்யாக நடந்து உயிர் வாழ்தலை விட, அவ்வாறு செய்யாமல் வறுமையுற்று இறந்து விடுதல், அறநூல்கள் சொல்லும் ஆக்கத்தைத் தரும்.

**அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்**
**புன்சொல் உரைப்பான் பொறை.**

**விளக்கம்:** ஒருவர் நேரில் இல்லாதது கண்டு பழிச்சொல் கூறுவோனுடைய உடல் பாரத்தை, இவனையும் சுமப்பதே எனக்கு அறம் என்று கருதி நிலம் சுமக்கின்றதோ?

## பயனில சொல்லாமை

**நயனிலன் என்பது சொல்லும் பயனில**
**பாரித் துரைக்கும் உரை.**

**விளக்கம்:** ஒருவன் பயனில்லா பொருள்களைப் பற்றி விரிவாகச் சொல்லும் சொற்கள், அவன் அறம் இல்லாதவன் என்பதை அறிவிக்கும்.

**சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில**
**நீர்மை யுடையார் சொலின்.**

**விளக்கம்:** பயனில்லாத சொற்களை நல்ல பண்பு உடையவர் சொல்லுவாரானால், அவனுடைய மேம்பாடு அவர்க்குரிய மதிப்போடு நீங்கிவிடும்.

**நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்**
**பயனில சொல்லாமை நன்று.**

**விளக்கம்:** சான்றோர் நயனில்லாதவற்றைச் சொல்லினுஞ் சொல்லுக, அமையும்; பயனில்லாதவற்றைச் சொல்லாமை நன்று. இது சான்றோர்க்கு ஆகாதென்றது.

## ஒப்புரவறிதல்

**தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு**
**வேளாண்மை செய்தற் பொருட்டு.**

***விளக்கம்:*** *ஒப்புரவாளன் தன்னால் இயன்ற முயற்சி செய்து சேர்த்த பொருள் எல்லாம் தக்கவர்க்கு உதவி செய்வதற்கே ஆகும்.*

**ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்**
**பேரறி வாளன் திரு.**

***விளக்கம்:*** *ஒப்புரவினால் உலகம் வாழுமாறு விரும்பும் பேரறிவாளியின் செல்வம், ஊரார் நீருண்ணும் குளம் நீரால் நிறைந்தாற் போன்றது.*

**ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்**
**விற்றுக்கோள் தக்க துடைத்து.**

***விளக்கம்:*** *ஒப்புரவால் கேடு வரும் என்றால் அக்கேடு ஒருவன் தன்னை விற்றாவது வாங்கிக் கொள்ளும் தகுதி உடையதாகும்.*

## தீவினையச்சம்

**தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்**
**தீவினை என்னும் செருக்கு.**

***விளக்கம்:*** *தீயவை செய்தலாகிய செருக்கைத் தீவினை உடைய பாவிகள் அஞ்சார், தீவினை இல்லாத மேலோர் மட்டுமே அஞ்சுவர்.*

**அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய**
**செறுவார்க்கும் செய்யா விடல்.**

***விளக்கம்:*** *தம்மை வருத்துவோர்க்கும் தீய செயல்களைச் செய்யாமலிருத்தலை, அறிவு எல்லாவற்றிலும் தலையான அறிவு என்று கூறுவர்.*

**இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்**
**இலனாகும் மற்றும் பெயர்த்து.**

***விளக்கம்:*** *யான் வறியவன் என்று நினைத்துத் தீய செயல்களைச் செய்யக்கூடாது, செய்தால் மீண்டும் வறியவன் ஆகி வருந்துவான்.*

## ஈகை

**இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்**
**குலனுடையான் கண்ணே யுள.**

**விளக்கம்:** யான் வறியவன் என்னும் துன்பச் சொல்லை ஒருவன் உரைப்பதற்கு முன் அவனுக்கு கொடுக்கும் தன்மை, நல்ல குடிபிறப்பு உடையவனிடம் உண்டு.

**சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்**
**ஈதல் இயையாக் கடை.**

**விளக்கம்:** சாவதை விடத் துன்பமானது வேறொன்றும் இல்லை, ஆனால் வறியவர்க்கு ஒரு பொருள் கொடுக்க முடியாதநிலை வந்தபோது அச் சாதலும் இனியதே ஆகும்.

## புகழ்

**உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கொன்று**
**ஈவார்மேல் நிற்கும் புகழ்.**

**விளக்கம்:** புகழ்ந்து சொல்கின்றவர் சொல்பவை எல்லாம் வறுமையால் இரப்பவர்க்கு ஒரு பொருள் கொடுத்து உதவுகின்றவரின் மேல் நிற்கின்ற புகழேயாகும்.

**நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்**
**போற்றாது புத்தேள் உலகு.**

**விளக்கம்:** நிலவுலகின் எல்லையில் நெடுங்காலம் நிற்கவல்ல புகழைச் செய்தால், வானுலகம் அவ்வாறு புகழ் செய்தாரைப் போற்றுமே அல்லாமல் தேவரைப் போற்றாது.

**தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்**
**தோன்றலின் தோன்றாமை நன்று.**

**விளக்கம்:** ஒரு துறையில் முற்பட்டுத் தோன்றுவதானால் புகழோடு தோன்ற வேண்டும், அத்தகைய சிறப்பு இல்லாதவர் அங்குத் தோன்றுவதைவிடத் தோன்றாமலிருப்பதே நல்லது.

## அருளுடைமை

**அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த**
**இன்னா உலகம் புகல்.**

**விளக்கம்:** *அறியாமையாகிய இருள் பொருந்திய துன்ப உலகில் இருந்து வாழும் வாழ்க்கை, அருள் பொருந்திய நெஞ்சம் உடையவர்களுக்கு இல்லை.*

**பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி**
**அல்லவை செய்தொழுகு வார்.**

**விளக்கம்:** *அருள் இல்லாதவராய் அறமல்லாதவைகளைச் செய்து நடப்பவர்களை, உறுதிப்பொருளாகிய அறத்திலிருந்து நீங்கித் தம் வாழ்க்கையின் குறிக்கோளை மறந்தவர் என்பார்.*

**வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்**
**மெலியார்மேல் செல்லு மிடத்து.**

**விளக்கம்:** *அருள் இல்லாதவன் தன்னை விட மெலிந்தவர் மேல் துன்புறுத்த செல்லும் போது, தன்னை விட வலியவரின் முன் தான் அஞ்சி நிற்கும் நிலைமையை நினைக்க வேண்டும்.*

## புலால் மறுத்தல்

**தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது ஊனுண்பான்**
**எங்ஙனம் ஆளும் அருள்.**

**விளக்கம்:** *தன் உடம்பைப் பெருக்கச் செய்வதற்காகத் தான் மற்றோர் உயிரின் உடம்பைத் தின்கின்றவன் எவ்வாறு அருளுடையவனாக இருக்க முடியும்?*

**படைகொண்டார் நெஞ்சம்போல் நன்னூக்காது ஒன்றன்**
**உடல்சுவை உண்டார் மனம்.**

**விளக்கம்:** *ஓர் உயிரின் உடம்பைச் சுவையாக உண்டவரின் மனம் கொலைக்கருவியைக் கையில் கொண்டவரின் நெஞ்சம் போல் நன்மையாகி அருளைப் போற்றாது.*

## தவம்

**தவமும் தவமுடையார்க்கு ஆகும் அதனை**
**அஃதிலார் மேற்கொள் வது.**

**விளக்கம்:** *தவக்கோலமம், தவஒழுக்கம் உடையவர்க்கே பொருந்துவதாகும்; அக்கோலத்தை தவஒழுக்கம் இல்லாதவர் மேற்கொள்வது வீண்முயற்சியாகும்.*

**வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்**
**ஈண்டு முயலப் படும்.**

***விளக்கம்:*** *விரும்பிய பயன்களை விரும்பியவாறே அடைய முடியுமாகையால், செய்யத்தக்க தவம் இந்நிலையிலும் (இல்லற வாழ்க்கையிலும்) முயன்று செய்யப்படும்.*

## கூடா ஒழுக்கம்

**வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்**
**புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.**

***விளக்கம்:*** *மனத்தை அடக்கும் வல்லமை இல்லாதவன் மேற்கொண்ட வலிய தவக்கோலம், புலியின் தோலைப் போர்த்திக் கொண்டு பயிரை பசு மேய்ந்தாற் போன்றது.*

**கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங் கன்ன**
**வினைபடு பாலால் கொளல்.**

***விளக்கம்:*** *நேராகத் தோன்றினும் அம்பு கொடியது; வளைவுடன் தோன்றினாலும் யாழின் கொம்பு நன்மையானது. மக்களின் பண்புகளையும் செயல் வகையால் உணர்ந்துகொள்ள வேண்டும்.*

## கள்ளாமை

**எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்**
**கள்ளாமை காக்கதன் நெஞ்சு.**

***விளக்கம்:*** *பிறரால் இகழப்படாமல் வாழ விரும்புகிறவன், எத்தன்மையானப் பொருளையும் பிறரிடமிருந்து வஞ்சித்துக்கொள்ள எண்ணாதபடி தன் நெஞ்சைக் காக்க வேண்டும்.*

**உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்**
**கள்ளத்தால் கள்வேம் எனல்.**

***விளக்கம்:*** *குற்றமானதை உள்ளத்தால் எண்ணுவதும் குற்றமே, அதானால் பிறன் பொருளை அவன் அறியாதப் வகையால் வஞ்சித்துக்கொள்வோம் என்று எண்ணாதிருக்க வேண்டும்.*

## வாய்மை

**வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்**
**தீமை இலாத சொலல்.**

**விளக்கம்:** வாய்மை என்று கூறப்படுவது எது என்றால், அது மற்றவர்க்கு ஒரு சிறிதும் தீங்கு இல்லாத சொற்களைச் சொல்லுதல் ஆகும்.

**பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த**
**நன்மை பயக்கும் எனின்.**

**விளக்கம்:** குற்றம் தீர்த்த நன்மையை விளைக்குமானால் பொய்யாச் சொற்களும் வாய்மை என்று கருதத் தக்க இடத்தைப் பெறும்.

**தன்நெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்**
**தன்நெஞ்சே தன்னைச் சுடும்.**

**விளக்கம்:** ஒருவன் தன் நெஞ்சம் அறிவதாகிய ஒன்றைக்குறித்துப் பொய்ச் சொல்லக் கூடாது, பொய் சொன்னால் அதைக்குறித்துத் தன் நெஞ்சமே தன்னை வருத்தும்.

**மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு**
**தானஞ்செய் வாரின் தலை.**

**விளக்கம்:** ஒருவன் தன் மனதோடு பொருந்த உண்மை பேசுவானானால், அவன் தவத்தொடு தானமும் ஒருங்கே செய்வாரை விடச் சிறந்தவன்.

## இன்னா செய்யாமை

**சிறப்பீனும் செல்வம் பெறினும் பிறர்க்குஇன்னா**
**செய்யாமை மாசற்றார் கோள்.**

**விளக்கம்:** சிறப்பைத் தருகின்ற பெருஞ் செல்வத்தைப் பெறுவதாக இருந்தாலும், பிறர்க்குத் துன்பம் செய்யாதிருத்தலே மாசற்றவரின் கொள்கையாம்.

**அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்**
**தந்நோய்போல் போற்றாக் கடை.**

**விளக்கம்:** மற்ற உயிரின் துன்பத்தை, தன் துன்பம் போல் கருதிக் காப்பாற்றா விட்டால் பெற்றுள்ள அறிவினால் ஆகும் பயன் உண்டோ.

## கொல்லாமை

**அறவினை யாதெனின் கொல்லாமை கோறல்**
**பிறவினை எல்லாந் தரும்.**

**விளக்கம்:** *அறமாகிய செயல் எது என்றால், ஒரு உயிரையும் கொல்லாமையாகும், கொல்லுதல் அறமல்லாத செயல்கள் எல்லாவற்றையும் விளைக்கும்.*

**தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது**
**இன்னுயிர் நீக்கும் வினை.**

**விளக்கம்:** *தன் உயிர் உடம்பிலிருந்து நீங்கிச் செல்வதாக இருந்தாலும், அதைத் தடுப்பதற்காகத் தான் வேறோர் உயிரை நீக்கும் செயலைச் செய்யக்கூடாது.*

## துறவு

**யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன்.**

**விளக்கம்:** *ஒருவன் எந்தந்தப் பொருளிலிருந்து, பற்று நீங்கியவனாக இருக்கின்றானோ, அந்தந்தப் பொருளால் அவன் துன்பம் அடைவதில்லை.*

**பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு.**

**விளக்கம்:** *பற்றில்லாதவனாகிய கடவுளுடைய பற்றை மட்டும் பற்றிக் கொள்ள வேண்டும், உள்ள பற்றுக்களை விட்டொழிப்பதற்கே அப்பற்றைப் பற்ற வேண்டும்.*

## அவா அறுத்தல்

**வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது**
**வேண்டாமை வேண்ட வரும்.**

**விளக்கம்:** *ஒருவன் ஒன்றை விரும்ப வேண்டுமானால், பிறவா நிலைமையை விரும்ப வேண்டும், அது அவா அற்ற நிலையை விரும்பினால் உண்டாகும்.*

**அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை**
**வஞ்சிப்ப தோரும் அவா.**

**விளக்கம்:** *ஒருவன் அவாவிற்கு அஞ்சி வாழ்வதே அறம், ஏன் எனில் ஒருவனைச் சோர்வு கண்டு கொடுத்து வஞ்சிப்பது அவாவே.*

## இறைமாட்சி

**அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்**
**எஞ்சாமை வேந்தர்க் கியல்பு.**

**விளக்கம்:** *அஞ்சாமை, ஈகை, அறிவுடைமை, ஊக்கமுடைமை இந்த நான்கு பண்புகளும் குறைவு படாமல் இருத்தலே அரசனுக்கு இயல்பாகும்.*

**இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால்**
**தான்கண் டனைத்திவ் வுலகு.**

**விளக்கம்:** *இனியச் சொற்களுடன் தக்கவர்க்குப் பொருளை உதவிக் காக்க வல்ல அரசனுக்கு இவ்வுலகம் தன் புகழோடு தான் கருதியபடி அமைவதாகும்.*

## கல்வி

**கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக.**

**விளக்கம்:** *கல்வி கற்க நல்ல நூல்களைக் குற்றமறக் கற்க வேண்டும், அவ்வாறு கற்ற பிறகு, கற்ற கல்விக்கு தக்கவாறு நெறியில் நிற்க வேண்டும்.*

**ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு**
**எழுமையும் ஏமாப் புடைத்து.**

**விளக்கம்:** *ஒரு பிறப்பில் தான் கற்றக் கல்வியானது அப்பிறப்பிற்கு மட்டும் அல்லாமல் அவனுக்கு ஏழுபிறப்பிறப்பிலும் உதவும் தன்மை உடையது.*

**கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்**
**இல்லாதாள் பெண்காமுற் றற்று.**

**விளக்கம்:** *எண் (கற்றவரின் அவையில்) கல்லாதவன் ஒன்றைச் சொல்ல விரும்புதல், முலை இரண்டும் இல்லாதவள் பெண் தன்மையை விரும்பினாற் போன்றது.*

## கேள்வி

**செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வம் அச்செல்வம்**
**செல்வத்து ளெல்லாந் தலை.**

**விளக்கம்:** *செவியால் கேட்டறியும் செல்வம், செல்வங்களுள் ஒன்றாகப் போற்றப்படும் செல்வமாகும், அச்செல்வம் செல்வங்கள் எல்லாவற்றிலும் தலையானதாகும்.*

**செவியுணவிற் கேள்வி யுடையார் அவியுணவின்**
**ஆன்றாரோ டொப்பர் நிலத்து.**

**விளக்கம்:** *கற்றவரின் செவியுணவாகிய கேள்வி உடையவர் நிலத்தில் வாழ்கின்றவரே ஆயினும் அவி உணவைக் கொள்ளும் தேவரோடு ஒப்பாவார்.*

## அறிவுடைமை

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு.**

**விளக்கம்:** *எப்பொருளை யார் யார் இடம் கேட்டாலும் (கேட்டவாறே கொள்ளாமல்) அப்பொருளின் மெய்யானப் பொருளைக் காண்பதே அறிவாகும்.*

**அறிவுடையார் எல்லா முடையார் அறிவிலார்**
**என்னுடைய ரேனும் இலர்.**

**விளக்கம்:** *அறிவுடையவர்(வேறொன்றும் இல்லாதிருப்பினும்) எல்லாம் உடையவரே ஆவர், அறிவில்லாதவர் வேறு என்ன உடையவராக இருப்பினும் ஒன்றும் இல்லாதவரே ஆவர்.*

## பெரியாரைத் துணைக்கோடல்

**அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை**
**திறனறிந்து தேர்ந்து கொளல்.**

**விளக்கம்:** *அறம் உணர்ந்தவராய்த், தன்னை விட மூத்தவராய் உள்ள அறிவுடையவரின் நட்பை, கொள்ளும் வகை அறிந்து ஆராய்ந்து கொள்ள வேண்டும்.*

**இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்**
**கெடுப்பா ரிலானுங் கெடும்.**

**விளக்கம்:** *கடிந்து அறிவுரைக் கூறும் பெரியாரின் துணை இல்லாதக் காவலற்ற அரசன், தன்னைக் கெடுக்ககும் பகைவர் எவரும் இல்லாவிட்டாலும் கெடுவான்.*

## தெரிந்து செயல்வகை

**செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க**
**செய்யாமை யானுங் கெடும்.**

**விளக்கம்:** *ஒருவன் செய்யத்தகாத செயல்களைச் செய்வதனால் கெடுவான், செய்யத்தக்க செயல்களை செய்யாமல் விடுவதனாலும் கெடுவான்.*

**எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மோடு**
**கொள்ளாத கொள்ளாது உலகு.**

**விளக்கம்:** *தம் நிலையோடு பொருந்தாதவற்றை உலகம் ஏற்றுக்கொள்ளாது, ஆகையால் உலகம் இகழ்ந்து தள்ளாத செயல்களை ஆராய்ந்து செய்ய வேண்டும்.*

## தெரிந்து தெளிதல்

**அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்**
**திறந்தெரிந்து தேறப் படும்.**

**விளக்கம்:** *அறம், பொருள், இன்பம், உயிர்காக அஞ்சும் அச்சம் ஆகிய நான்கு வகையாலும் ஆராயப்பட்ட பிறகே ஒருவன் ஒரு தொழிலுக்கு உரியவனாகத் தெளியப்படுவான்.*

**தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை**
**தீரா இடும்பை தரும்.**

**விளக்கம்:** *மற்றவனை ஒன்றும் ஆராயாமல் தெளிந்தால், அஃது அவனுக்கு மட்டும் அல்லாமல் அவனுடைய வழிமுறையில் தோன்றினவருக்கும் துன்பத்தைக் கொடுக்கும்.*

## சுற்றந்தழால்

**பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்**
**சுற்றத்தார் கண்ணே உள.**

**விளக்கம்:** *ஒருவன் வறியவனான காலத்திலும் அவனுக்கும் தமக்கும் இருந்த உறவைப் பாராட்டிப் பேசும் பண்புகள் சுற்றத்தாரிடம் உண்டு.*

**கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய**
**சுற்றத்தால் சுற்றப் படும்.**

**விளக்கம்:** *பொருள் கொடுத்தலும், இன்சொல் கூறுதலுமாகிய இரண்டும் செய்ய வல்லவனானால், ஒருவன் தொடர்ந்த பலச் சுற்றத்தால் சூழப்படுவான்.*

## ஊக்கமுடைமை

**உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை**
**நில்லாது நீங்கி விடும்.**

**விளக்கம்:** *ஒருவர்க்கு ஊக்கமுடைமையே நிலையான உடைமையாகும், மற்றப் பொருளுடைமையானது நிலைபேறு இல்லாமல் நீங்கிவிடுவதாகும்.*

**உரமொருவற்கு உள்ள வெறுக்கைஅஃ தில்லார்**
**மரம்மக்க ளாதலே வேறு.**

**விளக்கம்:** *ஒருவனுக்கு வலிமையானது ஊக்க மிகுதியே, அவ்வூக்கம் இல்லாதவர் மரங்களே, வடிவால் மக்களைப் போல் இருத்தலே வேறுபாடு.*

## சொல்வன்மை

**நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்**
**யாநலத்து உள்ளதூஉம் அன்று**

**விளக்கம்:** *நாவன்மையாகிய நலம் ஒருவகைச் செல்வம் ஆகும், அந்த நாநலம் தனிச்சிறப்புடையது, ஆகையால் மற்ற எந்த நலங்களிலும் அடங்குவது அன்று.*

**கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்**
**வேட்ப மொழிவதாம் சொல்.**

**விளக்கம்:** *சொல்லும் போது கேட்டவரைத் தன் வயப்படுத்தும் பண்புகளுடன், கேட்காதவரும் கேட்க விரும்புமாறு கூறப்படுவது சொல்வன்மையாகும்.*

## வினைத்தூய்மை

**ஒஓதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை**
**ஆஅதும் என்னு மவர்.**

**விளக்கம்:** *மேன்மேலும் உயர்வோம் என்று விரும்பி முயல்கின்றவர் தம்முடைய புகழ் கெடுவதற்குக் காரணமான செயலைச் செய்யாமல் விட வேண்டும்.*

**இடுக்கண் படினும் இளிவந்த செய்யார்**
**நடுக்கற்ற காட்சி யவர்.**

**விளக்கம்:** *அசைவற்ற, தெளிந்த அறிவினையுடையவர், துன்பத்தில் சிக்குண்டாலும், அத்துன்பத்தைத் தீர்ப்பதற்க்காக இழிவானச் செயல்களைச் செய்யமாட்டார்.*

## வினைத்திட்பம்

**வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்**
**மற்றைய எல்லாம் பிற.**

**விளக்கம்:** ஒரு தொழிலின் திட்பம் என்று சொல்லப்படுவது, ஒருவனுடைய மனதின் திட்பமே (உறுதியே) ஆகும், மற்றவை எல்லாம் வேறானவை.

**சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்**
**சொல்லிய வண்ணம் செயல்.**

**விளக்கம்:** இச்செயலை இவ்வாறு செய்து முடிக்கலாம் என்று சொல்லுதல் எவர்க்கும் எளியனவாம், சொல்லிய படி செய்து முடித்தல் அரியனவாம்.

## வினைசெயல்வகை

**வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்**
**தீயெச்சம் போலத் தெறும்.**

**விளக்கம்:** செய்யத்தொடங்கியச் செயல், கொண்ட பகை என்று இவ்விரண்டின் குறை ஆராய்ந்து பார்த்தால், தீயின் குறைபோல் தெரியாமல் வளர்ந்து கெடுக்கும்.

**செய்வினை செய்வான் செயன்முறை அவ்வினை**
**உள்ளறிவான் உள்ளம் கொளல்.**

**விளக்கம்:** செயலைச் செய்கின்றவன் செய்ய வேண்டிய முறை, அச்செயலின் உண்மையான இயல்பை அறிந்தவனுடையக் கருத்தைத் தான் ஏற்றுக் கொள்ளவதாகும்.

## நாடு

**தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்**
**செல்வரும் சேர்வது நாடு.**

**விளக்கம்:** குறையாத விளைபொருளும், தக்க அறிஞரும், கேடில்லாத செல்வம் உடையவரும், கூடிப்பொருந்தியுள்ள நாடே நாடாகும்.

**உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்**
**சேரா தியல்வது நாடு.**

**விளக்கம்:** மிக்க பசியும், ஓயாத நோயும் (வெளியே வந்து தாக்கி) அழிவு செய்யும் பகையும் தன்னிடம் சேராமல் நல்ல வகையில் நடைபெறுவதே நாடாகும்.

## அரண்

**ஆற்று பவர்க்கும் அரண்பொருள் அஞ்சித்தற்**
**போற்று பவர்க்கும் பொருள்.**

**விளக்கம்:** *படையெடுத்து போர் செய்யச் செல்பவர்க்கும் அரண் சிறந்ததாகும், படையெடுத்தவர்க்கு அஞ்சித் தன்னை புகழிடமாக அடைந்தவர்க்கும் அது சிறந்ததாகும்.*

**எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துதவும்**
**நல்லாள் உடையது அரண்.**

**விளக்கம்:** *தன்னிடம் (உள்ளிருப்போர்) எல்லாப் பொருளும் உடையதாய், போர் நெருக்கடியானவிடத்தில் உதவ வல்ல நல்ல விரர்களை உடையது அரண் ஆகும்.*

## நட்பு

**செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்**
**வினைக்கரிய யாவுள காப்பு.**

**விளக்கம்:** *நட்பைப்போல் செய்து கொள்வதற்கு அருமையானவை எவை உள்ளன, அதுபோல் தொழிலுக்கு அரிய காவலாக இருப்பவை எவை உள்ளன.*

**நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்**
**பண்புடை யாளர் தொடர்பு.**

**விளக்கம்:** *பழகப் பழக நற்பண்பு உடையவரின் நட்பு இன்பம் தருதல், நூலின் நற்பொருள் கற்கக் கற்க மேன்மேலும் இன்பம் தருதலைப் போன்றதாகும்.*

## நட்பாராய்தல்

**ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை**
**தான்சாம் துயரம் தரும்.**

**விளக்கம்:** *ஆராய்ந்து ஆராய்ந்து நட்புக் கொள்ளாதவனுடைய நட்பு, இறுதியில் தான் சாவதற்க்குக் காரணமானத் துயரத்தை உண்டாக்கிவிடும்.*

**குடிப்பிறந்து தன்கண் பழிநாணு வானைக்**
**கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு.**

**விளக்கம்:** *உயர்ந்த குடியில் பிறந்து, தன்னிடத்தில் வருகின்றப் பழிக்கு நாணுகின்றவனைப் பொருள் கொடுத்தாவது நட்பு கொள்ள வேண்டும்.*

## தீ நட்பு

**உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது**
**கொள்வாரும் கள்வரும் நேர்.**

**விளக்கம்:** *கிடைக்கும் பயனை அளந்து பார்க்கும் நண்பரும், அன்பைக் கொள்ளாமல் பெறுகின்ற பொருளைக் கொள்ளும் விலை மகளிரும், கள்வரும் ஒரு நிகரானவர்.*

**ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை**
**சொல்லாடார் சோர விடல்.**

**விளக்கம்:** *முடியும் செயலையும், முடியாத படி செய்து கெடுப்பவரின் உறவை, அவர் அறியுமாறு ஒன்றும் செய்யாமலே தளரச் செய்து கைவிட வேண்டும்.*

## கூடா நட்பு

**பலநல்ல கற்றக் கடைத்து மனநல்லர்**
**ஆகுதல் மாணார்க் கரிது.**

**விளக்கம்:** *பல நல்ல நூல்களைக் கற்றுத் தேர்ந்த போதிலும், அவற்றின் பயனாக நல்ல மனம் உடையவராகப் பழகுதல், உள்ளன்பினால் மாட்சியடையாதவர்க்கு இல்லை.*

**மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்**
**சொல்லினால் தேறற்பாற்று அன்று.**

**விளக்கம்:** *மனத்தால் தம்மொடு பொருந்தாமல் பழகுகின்றவரை, அவர் கூறுகின்ற சொல்லைக் கொண்டு எத்தகைய ஒரு செயலிலும் நம்பித் தெளியக்கூடாது.*

## பேதைமை

**பேதைமை என்பதொன்று யாதெனின் ஏதங்கொண்டு**
**ஊதியம் போக விடல்.**

**விளக்கம்:** *பேதைமை என்று சொல்லப்படுவது யாது என்றால், தனக்கு கெடுதியானதைக் கைக் கொண்டு ஊதியமானதை கைவிடுதலாகும்.*

**நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்**
**பேணாமை பேதை தொழில்.**

***விளக்கம்:*** தகாதவற்றிற்கு நாணாமலிருத்தல், தக்கவற்றை நாடாமலிருத்தல், அன்பு இல்லாமை, நன்மை ஒன்றையும் விரும்பாமை ஆகியவை பேதையின் தொழில்கள்.

## உட்பகை

**வாள்போல பகைவரை அஞ்சற்க அஞ்சுக**
**கேள்போல் பகைவர் தொடர்பு.**

***விளக்கம்:*** வாளைப்போல் வெளிப்படையான பகைவர்க்கு அஞ்ச வேண்டியதில்லை, ஆனால் உறவினரைப் போல் இருந்து உட்பகை கொண்டவரின் தொடர்புக்கு அஞ்ச வேண்டும்.

## பகைமாட்சி

**வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக ஓம்பா**
**மெலியார்மேல் மேக பகை.**

***விளக்கம்:*** தம்மை விட வலியவர்க்கு மாறுபட்டு எதிர்த்தலை விட வேண்டும், தம்மை விட மெலியவர் மேல் பகைக் கொள்வதை விடாமல் விரும்பி மேற்கொள்ள வேண்டும்.

**அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான்**
**என்பரியும் ஏதிலான் துப்பு.**

***விளக்கம்:*** ஒருவன் அன்பு இல்லாதவனாய், அமைந்த துணை இல்லாதவனாய், தானும் வலிமை இல்லாதவனாய் இருந்தால், அவன் பகைவனுடைய வலிமையை எவ்வாறு ஒழிக்க முடியும்.

## பெரியாரைப் பிழையாமை

**ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்**
**போற்றலுள் எல்லாம் தலை.**

***விளக்கம்:*** மேற்கொண்ட செயலைச் செய்து முடிக்க வல்லவரின் ஆற்றலை இகழாதிருத்தல், காப்பவர் செய்து கொள்ளும் காவல் எல்லாவற்றிலும் சிறந்தது.

**பெரியாரைப் பேணாது ஒழுகிற் பெரியாரால்**
**பேரா இடும்பை தரும்.**

**விளக்கம்:** *ஆற்றல் மிகுந்த பெரியாரை விரும்பி மதிக்காமல் நடந்தால், அது அப்பெரியாரால் நீங்காத துன்பத்தைத் தருவதாகும்.*

## கள்ளுண்ணாமை

**உண்ணற்க கள்ளை உணில்உண்க சான்றோரான்**
**எண்ணப் படவேண்டா தார்.**

**விளக்கம்:** *கள்ளை உண்ணக் கூடாது, சான்றோரால் நன்கு எண்ணப்படுவதை விரும்பாதவர் கள்ளை உண்ண வேண்டுமானால் உண்ணலாம்.*

**துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்**
**நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.**

**விளக்கம்:** *உறங்கினவர் இறந்தவரைவிட வேறுபட்டவர் அல்லர், அவ்வாறே கள்ளுண்பவரும் அறிவுமயங்குதலால் நஞ்சு உண்பவரே ஆவர்.*

## சூது

**வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்**
**தூண்டிற்பொன் மீன்விழுங்கி அற்று.**

**விளக்கம்:** *வெற்றியே பெறுவதாலும் சூதாட்டத்தை விரும்பக்கூடாது, வென்ற வெற்றியும், தூண்டில் இரும்பை இரை என்று மயங்கி மீன் விழுகினாற் போன்றது.*

**சிறுமை பலசெய்து சீரழக்கும் சூதின்**
**வறுமை தருவதொன்று இல்.**

**விளக்கம்:** *ஒருவனுக்குத் துன்பம் பலவற்றையும் உண்டாக்கி அவனுடைய புகழைக் கெடுக்கின்ற சூதைபோல் வறுமை தருவது வேறொன்றும் இல்லை.*

## குடிமை

**ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்**
**இழுக்கார் குடிப்பிறந் தார்.**

**விளக்கம்:** *உயர் குடியில் பிறந்தவர் ஒழுக்கமும், வாய்மையும், நாணமும் ஆகிய இம்மூன்றிலிருந்தும் வழுவாமல், இயல்பாகவே நன்னெறியில் வாழ்வர்.*

**குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்**
**மதிக்கண் மறுப்போல் உயர்ந்து.**

***விளக்கம்:*** *உயர் குடியில் பிறந்தவரிடத்தில் உண்டாகும் குற்றம், ஆகாயத்தில் திங்களிடம் காணப்படும் களங்கம் போல் பலரறியத் தோன்றும்.*

## மானம்

**பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய**
**சுருக்கத்து வேண்டும் உயர்வு.**

***விளக்கம்:*** *செல்வம் பெருகியுள்ள காலத்தில் ஒருவனுக்குப் பண்பு வேண்டும், செல்வம் குறைந்து சுருங்கும் வறுமையுள்ள காலத்தில் பணியாத உயர்வு வேண்டும்.*

**புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று**
**இகழ்வார்பின் சென்று நிலை.**

***விளக்கம்:*** *மதியாமல் இகழ்கின்றவரின் பின் சென்று பணிந்து நிற்க்கும் நிலை, ஒருவனுக்கு புகழும் தராது, தேவருலகிலும் செலுத்தாது, வேறு பயன் என்ன.*

## சான்றாண்மை

**குணநலம் சான்றோர் நலனே பிறநலம்**
**எந்நலத்து உள்ளதூஉம் அன்று.**

***விளக்கம்:*** *சான்றோரின் நலம் என்று கூறப்படுவது அவருடைய பண்புகளின் நலமே, மற்ற நலம் வேறு எந்த நலத்திலும் சேர்ந்துள்ளதும் அன்று.*

**ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்**
**மாற்றாரை மாற்றும் படை.**

***விளக்கம்:*** *ஆற்றலுடையவரின் ஆற்றலாவது பணிவுடன் நடத்தலாகும், அது சான்றோர் தம் பகைவரைப் பகைமையிலிருந்து மாற்றுகின்ற கருவியாகும்.*

## பண்புடைமை

**எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்**
**பண்புடைமை என்னும் வழக்கு.**

***விளக்கம்:*** *பண்பு உடையவராக வாழும் நல்வழியை, யாரிடத்திலும் எளிய செவ்வியுடன் இருப்பதால் அடைவது எளிது என்று கூறுவர்.*

**நகையுள்ளும் இன்னா திகழ்ச்சி பகையுள்ளும்**
**பண்புள பாடறிவார் மாட்டு.**

**விளக்கம்:** *ஒருவனை இகழ்ந்து பேசுதல் விளையாட்டிலும் துன்பம் தருவதாகும், பிறருடைய இயல்பை அறிந்து நடப்பவரிடத்தில் பகைமையிலும் நல்லப் பண்புகள் உள்ளன.*

## நாணுடைமை

**அணிஅன்றோ நாணுடைமை சான்றோர்க்கு அஃதின்றேல்**
**பிணிஅன்றோ பீடு நடை**

**விளக்கம்:** *சான்றோர்க்கு நாணுடைமை அணிகலம் அன்றோ, அந்த அணிகலம் இல்லையானால் பெருமிதமாக நடக்கும் நடை ஒரு நோய் அன்றோ.*

**பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு**
**உறைபதி என்னும் உலகு.**

**விளக்கம்:** *பிறர்க்கு வரும் பழிக்காகவும், தமக்கு வரும் பழிக்காகவும் நாணுகின்றவர் நாணத்திற்கு உறைவிட மானவர் என்று உலகம் சொல்லும்.*

## உழவு

**சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்**
**உழந்தும் உழவே தலை.**

**விளக்கம்:** *உலகம் பல தொழில் செய்து சுழன்றாலும், ஏர்த் தொழிலின் பின் நிற்கின்றது, அதனால் எவ்வளவு துன்புற்றாலும் உழவுத் தொழிலே சிறந்தது.s*

**உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர்.**

**விளக்கம்:** *உழவு செய்து அதனால் கிடைத்ததைக் கொண்டு வாழ்கின்றவரே உரிமையோடு வாழ்கின்றவர், மற்றவர் எல்லோரும் பிறரைத் தொழுது உண்டு பின் செல்கின்றவரே.*



# விடுதலைப் போராட்டத்தில் தமிழகம்

தமிழ்நாட்டில் விஜயநகரப் பேரரசு காலத்தில் மதுரைக்கு கிருஷ்ண தேவராயரால் பொறுப்பாளராக நியமிக்கப்பட்ட விஸ்வநாத நாயக்கரால் பாளையக்காரர் முறை உருவாக்கப்பட்டது. பாளையம் (அ) பெரிய நிலப்பரப்பின் உரிமை யாளர்கள் பாளையக்காரர்கள்.

- திருநெல்வேலியின் மேற்குப் பகுதியில் வாழ்ந்தவர்கள் மறவர் பாளையக்காரர் எனவும், கிழக்குப் பகுதியில் வாழ்ந்தவர் தெலுங்கு (அ) நாயக்கர் பாளையக்காரர் எனவும் அழைக்கப்பட்டனர்.
- பூலித்தேவன் மேற்கு பாளையக்காரர் வகையையும் வீரபாண்டிய கட்டபொம்மன் கிழக்கு பாளையக்காரர் வகையையும் சேர்ந்தவர்கள்.
- விஜயநகர அரசின் வீழ்ச்சிக்கு பிறகு கி.பி. 1792ம் ஆண்டு கிழக்கிந்தியக் கம்பெனி ஆற்காடு நவாப்புடன் **"கர்நாடக உடன்படிக்கை"** செய்து கொண்டு பாளையக்காரர்களிடம் வரி வசூல் செய்யும் உரிமை பெற்றது.
- இதற்கு முன்பும் பின்பும் ஆங்கிலேயர் ஆதிக்கத்தை எதிர்த்து புரட்சி வெடித்தது.

## பூலித்தேவன்

- மதுரையில் பிரிட்டிஷ் படைத்தளபதி மாபஸ்கான் முறையான கப்பம் கட்டாததால் பூலித்தேவன் மீது போர் அறிவித்தார்.
- கி.பி. 1755ல் நெற்கட்டும் சேவல் பகுதியில் நடந்த சண்டையில் கர்னல் ஹெறரான் தலைமையிலான ஆங்கிலேப்படை தோற்கடிக்கப்பட்டது. அப்போதைய காலக்கட்டத்தில் ஆங்கிலேய படையை எதிர்த்து இந்திய மன்னர் பெற்ற வெற்றி இதுவாகும்.
- மேற்கொண்டு தன் வலிமையை பெருக்க பூலித்தேன் ஐதர் அலி மற்றும் பிரெஞ்சு உதவியை நாடினார். ஐதர் அலியில் மராட்டியரும் போரில் ஈடுபட்டிருந்தால் உதவ முடிய வில்லை. ஆங்கிலேயர் கான்சாகிப் (எ) யூசுப் கானுக்கு பூலித்தேவனை அடக்கும் பொறுப்பை ஒப்படைத்தனர்.

- கி.பி. 1759-ல் கான்சாகிப் தலைமையில் திருவிதாங்கூர் மன்னர் மார்த்தாண்ட வர்மன் மன்னர் உதவியுடன் நெற்கட்டும் செவ்வில் கோட்டை முற்றுகையிடப்பட்டது. பூலித்தேவன் தோற்கடிக்கப்பட்டார்.
- கி.பி. 1764-ல் மீண்டும் பூலித்தேவன் கோட்டையை கைப்பற்றினாலும் கி.பி. 1767ம் ஆண்டு கர்னல் கேம்பெல் என்பரால் பூலித்தேவன் தோற்கடிக்கப்பட்டு கோட்டை முழுவதுமாக கைப்பற்றப் பட்டது.

> *யூசுப்கான் என்பவரே பின்னாட்களில் அறியப்பட்ட மருதநாயகம்*

## வீரபாண்டிய கட்டபொம்மன்

### தோற்றம்

| | | |
|---|---|---|
| வருடம் | : | கி.பி. 1761 |
| தந்தை | : | ஜெகவீர பாண்டிய கட்டபொம்மன் |
| மனைவி | : | ஜக்கம்மாள் |
| சகோதரர் | : | ஊமைத்துரை |
| தளபதி | : | வெள்ளைத் தேவன் |
| அமைச்சர் | : | சிவசுப்பிரமணியன் பிள்ளை |

1. கி.பி. 1790-ல் பாஞ்சாலகுறிச்சியின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றார்.
2. கட்டபொம்மன் வரி கட்டாததன் காரணமாக 1798 மே 31 - நாள்படி 3310 பகோடாக்கள் வரி பாக்கி விழுந்தது.
3. இதனால் இராமநாதபுரம் ஆட்சியர் ஜாக்சன் தன்னை வந்து சந்திக்குமாறு உத்தரவு பிறப்பித்தார்.
4. 1798-ல் செப்.19ம் தேதி இராமநாதபுரத்தில் நடந்த சந்திப்பின் போது கட்டபொம்மன் அவமதிக்கப்பட்டார். அவரை கைது செய்ய ஆணை பிறப்பிக்கப்பட்டது. அப்போது நடந்த மோதலில் ஆங்கிலேயர் சிலர் கொல்லப்பட்டனர். கட்டபொம்மன் தப்பிவிட்டாலும், அமைச்சர் சிவசுப்பிரமணிய பிள்ளை கைது செய்யப்பட்டார்.
5. இச்சம்பவம்குறித்துசென்னைஆளுநர் எட்வர்ட் கிளைவால் அமைக்கப்பட்ட விசாரணைக் குழுவின் முடிவின்படி கட்டபொம்மன் குற்றமற்றவர் என நிரூபிக்கப்பட்டு சிவசுப்பிரமணிய பிள்ளை விடுவிக்கப்பட்டார். ஜாக்சன் பணியிடை நீக்கம் செய்யப்பட்டர்.
6. பின்னர் ஏற்பட்ட பாளையக்கார கூட்டமைப்பில் கட்டபொம்மன் சேருவதற்கும், அது சம்மந்தமாக மருது சகோதர்களை சந்திக்கவும் கட்டபொம்மனுக்கு தடை விதிக்கப்பட்டது.
7. கட்டபொம்மன் சிவகிரி பாளையக்காரர் உதவியை நாடினர். அவர்கள் மறுக்கவே கட்டபொம்மன் சிவகிரி மீது படையெடுத்தார். சிவகிரி ஆங்கிலேயருக்கு முறையாக கப்பம் செலுத்தி வந்ததால் ஆங்கிலேயப் படை வெல்லெஸ்லி பிரபு உத்தரவுபடி திருநெல்வேலி மீது படையெடுத்தன.
8. பாஞ்சாலங்குறிச்சி கோட்டை பற்றி இராமலிங்க முதலியார் வழங்கிய தகவல்கள் படி போர் வியூகத்தை வகுத்திருந்த மேஜர் பானர் மேன்

கோட்டையை செப்.4, 1799-ல் முற்றுகையிற்றார். கட்டபொம்மன் சரணடைய மறுக்கவே 1799 செப்-5 போர் ஏற்பட்டது.

9. பாஞ்சாலங்குறிச்சியின் கள்ளர்பட்டி (கோளார்பட்டி) என்ற இடத்தில் கட்ட பொம்மன் தோற்கடிக்கப்பட்டார் கட்ட பொம்மன் மற்றும் ஊமைத்துரை தப்பி விட்டாலும் சிவசுப்ரமணிய பிள்ளை கைது செய்யப்பட்டார். கோட்டையும் கைப்பற்றப்பட்டது. 1799 செப். 13ல் சிவ சுப்ரமணிய பிள்ளை நாகலாபுரத்தில் தூக்கிலிடப்பட்டார்.
10. களப்பூர் காட்டில் மறைந்திருந்த கட்டபொம்மனை புதுக்கோட்டை மன்னர் விஜயரகுநாத தொண்டை மான் சிறைபிடித்து ஆங்கிலேயரிடம் ஒப்படைத்தார்.
11. ஆங்கிலேயர் தீர்ப்பின்படி 1799, அக்டோபர் 16 அன்று திருநெல்வேலிக்கு அருகிலுள்ள கயத்தாறு கோட்டையில் கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்டார்.

## தென்னிந்திப் புரட்சி

### மருது சகோதரர்கள்

ஆங்கிலேய நடவடிக்கைகளால் வெறுப்புற்றிருந்த மக்கள் எதிர்ப்பாளர்கள் சித்ரவதைக்குள்ளாக்கப்பட்டதால் புரட்சிக்கு ஆயத்தாமாயினர். ஒட்டுமொத்த எதிர்ப்பை ஒருங்கிணைத்து கூட்டணி ஏற்படுத்தியவர்கள் மருது சகோதரர்கள்.

### தோற்றம்

தந்தை – மூக்கையா பழநியப்பன்

தாய் – பொன்னாத்தாள்

சிவகங்கையை ஆட்சி செய்த முத்துவடுக நாதரிடம் இராணுவ வீரர்களாக பணியாற்றியவர்களே சின்னமருது, பெரிய மருது ஆவர்

*முத்து வடுகநாதரின் மனைவியே பின்னர் அறியப்பட்ட வீரமங்கை வேலுநாச்சியார்.*

- பிற்காலத்தில் ஆட்சியாளர்களான மருது சகோதரர்கள் ஆங்கில எதிர்ப்பாளர்களை ஒருங்கிணைத்து தென்னிந்தியக் கூட்டமைப்பை ஏற்படுத்தினார்.

| கூட்டமைப்பு | | தலைமை |
|---|---|---|
| இராமநாதபுரம்/ சிவகங்கை | – | மருது சகோதரர்கள் |
| திருநெல்வேலி | – | கட்டபொம்மன் |
| திண்டுக்கல் | – | கோபால நாயக்கர் |
| மலபார் | – | கேரள வர்மா |
| மைசூர் | – | கி ரு ஷ் ண ப் ப நாயக்கர் |
| கன்னட மராத்தியர் | – | தூண்டாஜி வாக் |

- 1800 ஜீன் 3-ம் தேதி எனத் திட்டமிடப்பட்டிருந்த கிளர்ச்சி 1800 மார்ச் 30-ம் தேதியே மராத்திய மன்னர் தூண்டாஜியால் ஆரம்பிக்கப்பட்டது.
- தென்னிந்தியக் கூட்டணியின் வலுவான எதிர்ப்பால் புரட்சி நீடித்துக் கொண்டிருந்த சமயத்தில் மருது சகோதரர்களால் திருச்சி பிரகடனம்

1801ல் வெளியிடப்பட்டு நவாபின் கோட்டை சுவரிலும், ஸ்ரீரங்கம் கோயில் சுவரிலும் ஒட்டப்பட்டது.

- ஆங்கிலேயருக்கு எதிராக அனைத்து இந்தியர்களையும் ஒருங்கிணைந்த முதல் பிரகடனம் இதுவாகும்.
- கிளர்ச்சியின் முக்கிய கேந்திரமான காளையார் கோவிலின் சிறுவயல் பகுதியை கி.பி. 1801ம் ஆண்டு மே-29ம் நாள் கர்னல் அக்னுவின் தலைமையிலான ஆங்கிலப்படை தாக்கியது. மருது சகோதர்கள் தோற்கடிக்கப்பட்டனர்.
- ஆங்கியலேயர்களால் தோற்கடிக்கப் பட்ட மருது சகோதரர்கள் சிங்கம்புணரி காட்டில் மறைந்து கொண்டனர். 1801 ஜீலை 31-ல் ஏற்படுத்திக் கொண்ட உடன்படிக்கைப்படி தமிழகம் முழுவதும் ஆங்கிலேயர் கட்டுப்பாட்டில் வந்தது.
- மருது சகோதரர்கள் புதுக்கோட்டை மன்னரால் காட்டிக் கொடுக்கப்பட்டு 1801 அக். 24-ல் திருப்பத்தூர் கோட்டை யில் தூக்கிலிடப்பட்டார்.
- பாஞ்சாலங்குறிச்சியில் மீண்டும் புரட்சி செய்த ஊமைத்துரை நவம்பர் 16, 1801-ல் கழுவேற்றப்பட்டார்.

### தோல்விக்கான காரணங்கள்

1. திட்டநாளுக்கு இரண்டு மாதத்திற்கு முன்னரே தொடங்கப்பட்டது.
2. ஒற்றுமையின்மை மற்றும் சில மன்னர்கள் ஆங்கிலேயருக்கு ஆதரவு அளித்தது.
3. நவீன ஆயுதங்கள் இல்லாமல் நேரடி மோதலில் ஈடுபட்டது.
4. பொதுமக்கள் ஆதரவு பூரணமாக கிடைக்கவில்லை.

## வேலூர் புரட்சி

### காரணங்கள்

1. கி.பி. 1801ம் ஆண்டு புரட்சி முடிவுற்றாலும் மக்கள் மனதில் இருந்து அழியவில்லை. தப்பிய கிளர்ச்சியாளர்கள் இராணுவத்தில் சேர்ந்து இரகசியமாக சந்தித்து தகவல் பரிமாறிக் கொண்டனர்.
2. கோட்டையில் சிறை வைக்கப்பட்டிருந்த திப்புவின் வாரிசுகள் மைசூர் முடியாட்சியை மீட்க வேண்டும் என கருதினர்.
3. இந்திய சிப்பாய்கள் ஆங்கிலேய வீரர்களுக்கு சமமாக நடத்தப்படாததால் சிப்பாய்கள் மத்தியில் இது வேற்றுமை யை வளர்த்தது.
4. அப்போதைய சென்னை ஆளுநராக இருந்த வில்லியம் பெண்டிங் பிரபு அனுமதியுடன் படைத்தளபதி சர் ஜான் கிராடாக் கி.பி. 1806-ல் அறிமுகப்படுத்திய தளபதி அக்னயூ என்பவரால் வடிவமைக்கப்பட்ட தலைப்பாகை மற்றும் இராணுவச் சீர்திருத்தங்கள் முக்கிய மற்றும் உடனடி காரணமாக அமைந்தது.

### போக்கு

இராணுவப் புரட்சிக்கு திப்புவின் மூத்த மகன் பதேக் ஹைதர் மற்றும் மொய்சுதீன் என்ற இருவரும் இணைந்து திட்டம் தீட்டினர். இரகசிய தகவல்கள் முகமது மாலிக் என்பவர் மூலம் பரிமாறப்பட்டது.

1806 ஜுலை 13-ம் நாள் காலை கோட்டையை கைப்பற்றுவது என திட்டமிடப்பட்டிருந்தது.

1. ஜுலை 9, 1806 அன்று இரவு நடைபெற்ற திப்புவின் மகன் திருமணத்தில் கலந்து கொண்ட சிப்பாய்களில் 23-ம் படைப்பிரிவைச் சேர்ந்த சிப்பாய்கள் ஜுலை 10 விடியற் காலையில் கிளர்ச்சியை துவக்கினர்.
2. இராணுவ அதிகாரி கர்னல் பான்கோர்ட் புரட்சிக்கு முதல் பலியானார். அடுத்ததாக கர்னல் மிகேரல் சுட்டு கொல்லப்பட்டார்.
3. புரட்சி தொடங்கிய சில மணிநேரத்தில் கோட்டை இந்திய சிப்பாய்கள் கட்டுப்பாட்டில் வந்தது. பதேக் ஹைதர் சுல்தானாக அறிவிக்கப்பட்டு திப்புவின் புலிக்கொடி பறக்கவிடப்பட்டது.
4. இதுபற்றி தகவல் அறிந்த கோட்டையின் தளபதி மேஜர் கூட்ஸ் விரைந்து சென்று கர்னல் கில்லெஸ்பியம் தெரிவித்தார்.
5. இராணுவப் படையுடன் வந்த கில் லெஸ்பியால் பியாஸ் கோட்டை கைப்பற்றப்பட்டு வீரர்கள் சிறைபிடிக்கப்பட்டனர். திப்புவின் குடும்பம் கொல்கத்தா சிறைக்கு மாற்றப் பட்டது.
6. வேலூர் புரட்சி தோல்வியில் முடிந்தது.

### தோல்விக்கான காரணங்கள்

1. திட்டமிட்டதற்கு முன்னரே தொடங்கப் பட்டது.
2. முறையாக ஒருங்கிணைக்கப்படவில்லை.
3. உரிய காலத்தில் உதவி கிடைக்கவில்லை.
4. மக்கள் பங்கு கொள்ளவில்லை.
5. பல சிப்பாய்கள் ஆங்கிலேயருக்கு விசுவாசமாக இருந்தனர்.

### அறிஞர்கள் கருத்து

1. V.D.சவாக்கர் : "முதல் இந்திய சுதந்திர போருக்கு முன்னோடி"
2. ந. சஞ்சீவி : "இந்திய விடுதலைக்கு தமிழர்களே முன்னோடி"
3. கே. ராசய்யன் : "மருது சகோதரர்கள் நடத்திய போராட்டத்தின் தொடர்ச்சி"
4. கே.கே. பிள்ளை : "வேலூர் கலகம்தான் 1857-சிப்பாய் கலகத்துக்கு வழி வகுத்தது" என்பதை மறுக்கிறார்.

# சுதந்திர போராட்டத்தில் தமிழகம்

## சென்னை சுதேசி சங்கம்(1852)

- சென்னை சுதேசி சங்கம் வங்காள பிரிட்டிஷ் இந்தியக் கழகத்தின் கிளையாக துவக்கப்பட்டது.
- சென்னை மாகாணத்தில் மக்கள் உரிமைகளை நிலைநாட்ட மேற்கத்திய முறையில் ஏற்படுத்தப்பட்ட முதல் அமைப்பு சென்னை சுதேசி சங்கம்.
- இதனை ஹார்லி, லட்சுமி நரசுச் செட்டி, சீனிவாசப் பிள்ளை ஆகியோர் நிறுவினர். இச்சங்கம் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் கொள்கைகளை விமர்சனம் செய்தது.
- 1856-ல் வருவாய்த்துறை அதிகாரிகள் செய்த சித்ரவதை பற்றி விசாரணை செய்ய வற்புறுத்தியது.
- 1858-ல் திருநெல்வேலியில் ஏற்பட்ட சமயகலவரங்களை சரியாக கையாளவில்லை என அதிகாரிகள் மீது குறை கூறப்பட்டது.
- 1860-ல் தஞ்சை மன்னரை மீண்டும் பதவியில் அமர்த்த பாராளு மன்றத்திற்கு விண்ணப்பம் அளித்தது.

## சென்னை மகாஜன சபை (1884)

- 1884-ம் ஆண்டு சென்னை மகாஜன சபைஉருவாக்கப்பட்டது. எஸ்.இராமசாமி முதலியார், பி. அனந்தாசாருலு, ரெங்கையா நாயுடு ஆகியோர் இதனை ஏற்படுத்தியவர்கள். இச்சபை சென்னை அண்ணாசாலையில் அமைந்திருந்தது.
- சென்னை மகாஜன சபையின் முதல் தலைவரக பி.ரெங்கையா நாயுடு தேர்ந்தெடுக்கப்பட்டார்.
- இந்திய அரசப் பிரதிநிதி எல்ஜின் பிரபு, டிசம்பர் 1895-ம் ஆண்டு சென்னைக்குப் பயணம் மேற்கொண்ட போது, சென்னை மகாஜன சபை வழங்கிய வரவேற்பை ஏற்க மறுத்தார்.
- 1920-ம் ஆண்டு உப்புச் சத்தியாக்கிரகப் போராட்டத்தை சென்னையில் ஜார்ஜ் டவுன், யானைகவுனி, உயர்நீதி மன்றம் மற்றும் கடற்கரைப் பகுதியில் தலைமையேற்று நடத்தியது.
- இப்போராட்டத்தின் போது இதன் உறுப்பினர்கள் கடுமையாகத் தாக்கப் பட்டனர். இந்நிகழ்வு குறித்து விசாரிக்க நீதிபதி, **டி.ஆர். இராமச்சந்திர**

**அய்யர்** தலைமையில் மூன்று பேர் கொண்ட குழு அமைக்கப்பட்டு அரசிடம் அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டது.

- ஆங்கில அரசு காங்கிரஸ் கட்சிக்குத் தடை விதித்திருந்த போது, சென்னை மகாஜன சபை, சுதேசிப் பொருட்கள் கண்காட்சி, அனைத்திந்திய கதர், கைத்தறிக் கண்காட்சி போன்ற பல்வேறு பொருட்கள் கண்காட்சி மூலம் மக்கள் மனதில் நாட்டுப்பற்றை வளர்த்து வந்தது.
- தேசத்தந்தை மகாத்மா காந்தி, 1896 அக்டோபர் 24-ல் சென்னை மகாஜன சபையில் உரையாற்றினார். இச்சபையின் பொன்விழாக் கொண்டாட்டத்தில் ஜவஹர்லால் நேரு கலந்து கொணடார்.

### இந்திய தேசிய காங்கிரஸ்

**(டஃப்ரின் பிரபு வைசிராயாக இருந்த கால கட்டத்தில்)**

- ஓய்வு பெற்ற ஆங்கிலேய அதிகாரி யான **ஆலன் ஆக்டேவியர் ஹியூம்** என்பவரால் 1885-ம் ஆண்டில் இந்திய தேசிய காங்கிரஸ் தோற்றுவிக்கப்பட்டது.
- இந்திய தேசிய காங்கிரஸின் முதல் மாநாடு 1885, டிசம்பர் 28 அன்று பம்பாயில் கூடியது.
- இந்தியா முழுவதிலுமிருந்து அம்மாநாட்டில் கலந்து கொண்ட பிரதிநிதிகள் 72 பேர். சென்னை மாகாணத்திலிருந்து பங்கேற்ற 21

| சங்கங்களின் பெயர் | தோற்றுவித்த ஆண்டு | தோற்றுவித்தவர் |
|---|---|---|
| இந்து இலக்கியச் சங்கம் | 1830 | - |
| சென்னை சுதேசி இயக்கம் (Madras Native Assication) | 1852 | லெட்சுமி நரசு செட்டி |
| இந்து முன்னேற்ற மேன்மைச் சங்கம் (Hindu Progressive Improvement Society) | 1853 | சீனிவாசப் பிள்ளை |
| மத்திய தேசிய முகமதிய சங்கம் | 1883 | - |
| மதராஸ் மகாஜன சபை | 1884 | அனந்தாச்சார்லு, ரெங்கையா நாயுடு |
| தென்னாட்டுத் தமிழ்ச் சங்கம் | 1890 | - |
| திராவிட பாஷா சங்கம் | 1899 | - |
| சுயாட்சி இயக்கம் | 1916 | அன்னிபெசன்ட் |
| நெல்லை தேசாபிமானச் சங்கம் | 1908 | வ.உ.சி. |
| தென்னிந்தியர் நல உரிமைச் சங்கம் | 1916 | டி.எம். நாயர், தியாகராஜ செட்டிார் |

பேரில், தமிழ்நாட்டுப் பகுதியிலிருந்து பங்கேற்றவர்கள் 16 பேர்.

- தமிழ்நாட்டுப் பிரதிநிதிகள் அனைவரும் சென்னை மகாஜன சங்கத்தின் சார்பாகச் சென்றவர்கள் ஆவர்.
- முதல் காங்கிரஸ் மாநாட்டுத் தலைவராக டபுள்யு.சி.பானர்ஜியின் பெயரை வழிமொழிந்து, மாநாட்டின் முதல்தீர்மானத்தை முன்மொழிந்த பெருமை தமிழ்நாட்டுப் பிரதிநிதியான எஸ்.சுப்பிரமணிய அய்யருக்கே கிடைத்தது.

*டேவிட் அர்னால்டு “காந்தி தனது ரௌலட் சத்யாகிரகத்திற்கு தமிழ்நாட்டு தீவிரவாதிகளின் ஆதரவை நாடினார்.”*

- காங்கிரஸின் மூன்றாவது மாநாடு 1887 டிசம்பரில் சென்னை நகரில் ஆயிரம் விளக்கு பகுதியில் மக்கள் தோட்டம் என்னுமிடத்தில் நடைபெற்றது. காங்கிரஸ் வினாவிடை அல்லது இத்தேசத்தில் வருஷா வருஷா கூடி வரும் காங்கிரஸ் ஜனசபையின் சரித்திரம் நூலை இந்த ஆண்டில் முடும்பை வீர ராகவாச்சாரியார் வெளியிட்டார்.

*மூன்றாவது மாநாட்டின் சிறப்பு அம்சம்: அதன் செலவின் பெரும்பகுதி பெரிது மக்களிடமிருந்து வசூலிக்கப்பட்டது.*

- சென்னை மாகாணத்தின் சார்பில் 362 பிரதிநிதிகள் பங்கேற்ற இம்மாநாட்டிற்குப் பக்ருதீன் தியாப்ஜி தலைமைவகித்தார். முதன்முறையாகத் திறந்த வெளித் திடலில் அமைக்கப்பட்ட பந்தலில்நடைபெற்றது.
- அன்றைய சென்னை கவர்னரான கன்னிமாரா பிரபு இம்மாநாட்டுப் பிரதிநிதிகள் அனைவருக்கும் சிறப்பு விருந்தளித்துச் சிறப்பித்தார்.
- 1920, நாக்பூர் காங்கிரஸ் மாநாட்டின் தலைவர் சி.பி. விஜயராகவாச்சாரியும், 1926, கௌகாத்தி மாநாட்டின் தலைவர் எஸ்.சீனிவாச அய்யங்காரும் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்களே.
- சுதந்திரத்திற்கு முன்பாக சென்னையில் இந்தியதேசியகாங்கிரஸின்மாநாடுகள் 7 முறை நடைபெற்றுள்ளன.

| ஆண்டு | தலைமை |
|---|---|
| 1885 | பக்ருதீன் தியாப்ஜி |
| 1894 | ஆல்பிரட் வெப் |
| 1898 | ஆனந்த் மோகன் போஸ் |
| 1903 | லால்மோகன் கோஷ் |
| 1914 | ராஷ்பிஹாரி கோஷ் |
| 1927 | எம்.ஏ. அன்சாரி |

## தமிழ்நாட்டு மிதவாதிகள்

- காங்கிரசில் **கோபாலகிருஷ்ண கோகலேயைப்** பின்பற்றியவர்கள் மிதவாதிகள் என்றழைக்கப்பட்டனர்.
- கோகலேயின் வலக்கரமாக திகழ்ந்த வி.எஸ். சீனிவாச சாஸ்திரி மிதவாதி களுக்கெல்லாம் மித வாதியாக விளங்கினார். மேலும் பி.எஸ். சிவசாமி அய்யர், வி.கிருஷ்ணசாமி அய்யார். டி.ஆர். வெங்கடராம சாஸ்திரி, ஜி.ஏ.நடேசன், திரு.வி. கல்யாண

சுந்தரனார், டாக்டர்.பி. வரதராஜுலு நாயுடு, ஈ.வெ.ராமசாமி நாயக்கர், எஸ்.சீனிவாச அய்யங்கார் ஆகியோர் தமிழ்நாட்டின் மிதவாதிகளாவர்.

## தமிழ்நாட்டுத் தீவிரவாதிகள்

- பாலகங்காதார திலகரைப் பின் பற்றியவர்கள் தீவிரவாதிகள் என்ற ழைக்கப்பட்டனர். திலகரின் தேசியக் கட்சி கொள்கைகளை விளக்கி 1907-ம் ஆண்டு கல்கத்தாவில் அவர் பேசியதை புதிய கட்சியின் கொள்கைகள் என்ற நூலில் பாரதியார் மொழிபெயர்த்துத் தந்திருக்கிறார்.
- **தமிழ்நாட்டு தீவிரவாதத்தின் தந்தை** என சேலம் விஜயராகவாச் சாரியைக் கூறலாம். அவரது பாசறையில் பயிற்சி பெற்றவர்களில் முக்கியமானவர் ராஜாஜி என அழைக்கப்படும் சி.ராஜகோபாலச்சாரி.
- டி.எம். நாயார், எஸ். கஸ்தூரிரங்க அய்யங்கார், ஏ.ராமசாமி அய்யங்கார், டி.ரெங்காச்சாரி, வ.உ. சிதம்பரம் பிள்ளை, அரவிந்தகோஷ், சுப்பிர மணியசிவா, சி. சுப்பிரமணிய பாரதி, வ.வே. சுப்பிரமணிய அய்யர் நீலகண்ட பிரம்மச்சாரி, வாஞ்சிநாதன், சுதேசி பத்மநாப அய்யர் ஆகியோர் தமிழ்நாட்டின் குறிப்பிடத்தக்க காங்கிரஸ் தீவிரவாதிகளாவர்.
- வ.உ. சிதம்பரனார் தமிழ்நாட்டுத் திலகர் என்று அழைக்கப்பட்டார்.
- தமிழ்நாட்டில் திலகரின் தளபதிகளாக வ.உ.சியும் சுப்பிரமணிய சிவாவும் கருதப்பட்டனர்.

## தமிழ்நாட்டின் புரட்சி தேசியவாதிகள்

- மிதவாதிகள் மற்றும் தீவிரவாதிகளின் நடவடிக்கை தோல்வியுற்றபோது, தீவிரவாதிகளின் சிலர் பயங்கரவாதிகள் ஆயினர். 1905-ல் இலண்டனில் “ஹோம்ரூல்லீக்” என்ற அமைப்பையும் 1966-ல் இந்தியா விடுதி என்ற முகாமையும் அமைத்தனர்.
- தமிழ்நாட்டைச் சேரந்த வ.வே. சுப்ரமணிய அய்யரும், திருச்சி டாக்டர் டி.எஸ்.எஸ். ராஜனும், எம்.பி.டி. ஆச்சாரியாவும் அப்பயங்கரவாதப் பாசறையில் பயிற்சி பெற்றோர் ஆவர்.
- ஆயுதப் புரட்சியின் மூலம் விடுதலை பெறுவதே இவர்களது நோக்கம்.
- புரட்சிவாதியான நீலகண்ட பிரம்மச்சாரி 1910 ஏப். 10-ம் தேதி “பாரத மாதா சங்கம்” என்ற அமைப்பை ஏற்படுத்தினார்.
- இவரின் சந்திப்பிற்கு பின்னரே வ.வே.சு. ஐயரிடம் துப்பாக்கி பயிற்சி பெற்று வாஞ்சிநாதன் 1911- ஜுன் 17-ம் தேதி திருநெல்வேலி மாவட்ட கலெக்டர் ஆஷ் துறையை மணியாச்சி ரயில் நிலையத்தில் சுட்டுக் கொன்றனர்.

## தமிழ்நாட்டில் சுதேசி இயக்கம்

- வங்காளத்தில் 1905 இல் தோன்றிய சுதேசி இயக்கம் தமிழக மக்களிடையே அரசியல் விழிப்புணர்வை ஏற்படுத்தியது. **“வந்தே மாதரம்”** என்ற முழக்கம் தமிழகத்தில் ஒலிக்கத் துவங்கியது.
- தென்னாட்டுத் திலகர் என அழைக்கப்பட்ட வ.உ. சிதம்பரனார் தமிழ்நாட்டிலுள்ள கிராமங்களில்

சுதேசிக் கருத்துக்களைப் பரப்பி வந்தார். 1906ல் சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனியை நிறுவினார். கப்பலோட்டிய தமிழன் எனப்புகழ் பெற்றார்.

- தமிழ்நாட்டில் சுதேசி இயக்கத்துடன் பயங்கரவாதமும் ஓரளவு தலை தூக்கியது.
- திருநெல்வேலி மாவட்ட ஆட்சியரான ஆஷ் என்பவரை மணியாச்சி ரயில் நிலையத்தில் வாஞ்சிநாதன் சுட்டுக் கொன்றார். இவ்வழக்கை விசாரித்த நீதிபதிகளுள் ஒருவரான சங்கரன் நாயர், இந்தக் கொலை தேசிய விழிப்பின் எதிரொலி என்று குறிப்பிட்டார்.
- சுதேசி இயக்கத் தலைவர்களான வ.உ சிதம்பரனார், பாரதியார், சுப்ரமணிய சிவா போன்றவர்களது பேச்சும், எழுத்தும் மக்களை எழுச்சியுறச் செய்தன.

## தன்னாட்சி இயக்கம்(1916)

- 1916-ம் ஆண்டு செப்டம்பர் 3 அன்று, சென்னை கோகலே மண்டபத்தில் **தன்னாட்சிக் கழகம்** (Home Rule League) **அன்னிபெசன்ட்** அம்மையாரால் துவக்கப்பட்டது. இதற்கு முன்னோடியாக ‘இந்திய புத்திரர்கள் சபை’யை அவர் நிறுவியிருந்தார்.
- தன்னாட்சிக் கழகத்தின் தலைவராக அன்னிபெசன்ட் அம்மையாரும், ஜி.எஸ். அருண்டேல் அமைப்புச் செயலாராகவும், சி.பி.ராமசாமி அய்யர் பொதுச் செயலாளராகவும், பி.பி. வாடியா பொருளாளராகவும பொறுப்பேற்றனர்
- பிரிட்டிஷ் பேரரசுக்குள் இந்தியா சுயாட்சி பெற வேண்டும் என்பதே தன்னாட்சிக் கழகத்தின் குறிக்கோள்.
- இந்திய தேசிய காங்கிரஸ் பிளவுபட்டு முடங்கிக் கிடந்த காலத்தில் தன்னாட்சி இயக்கம் தேசியப் போராட்டத்தைத் தீரத்துடன் வழிநடத்தியது.
- அன்னிபெசண்ட் அம்மையாரின் சுயாட்சி சங்கத்திற்குக் கிடைத்த பரிசு என 1917, ஆகஸ்ட் 20ல் வெளியான மாண்டேகு பிரகடனத்தைக் கூறலாம்.
- அன்னிபெசண்டின் சாதனைகளைப் பாராட்டி அவரைப் பெருமைப்படுத்தும் விதத்தில் 1917- டிசம்பரில் கல் கத்தாவில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டின் தலைவராக அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## ரௌலட் சத்யாக்கிரகம்

- மகாத்மா காந்தி தமிழ்நாட்டில் தங்கியிருந்த போதுதான் ரௌலட் சட்டம் நிறைவேற்றப்பட்டது. அதை எதிர்த்து காந்தி ரௌலட் சத்தியாக்கிரகத்தைத் தமிழ்நாட்டிலிருந்துதான் தொடங்கினார். **காந்தியின் முதல் அகில இந்திய சத்தியாக்கிரகப் போராட்டம்** இதுதான்.
- தமிழ்நாட்டுக்கு 1919, மார்ச் 17 அன்று வருகை தந்த காந்தி, கஸ்தூரிரங்க அய்யங்கார் வீட்டில் தங்கினார். அங்கு ரௌலட் சட்ட எதிர்ப்புத்

திட்டம் உருவாக்கப்பட்டு, அதன் தொடர்ச்சியாக சத்தியாக்கிரக சபை உருவாக்கப்பட்டது.

- காந்தி சத்தியாக்கிரக சபையின் தலைவர்; சி.விஜயராகவாச்சாரி, டி.பிரகாசம் ஆகியோர் துணைத் தலைவர்கள்; சி.ராஜகோபாலாச்சாரி, எம்.சி. நஞ்சுண்டராவ், எ.கஸ்தூரிரங்க அய்யங்கார், ஜி. அரிபுரவோத்தம் ராவ், சேலம் டி. ஆதிநாராயண செட்டியார் ஆகியோர் செயலாளர்கள் என நிர்வாகிகள் பொறுப்பேற்றிருந்தனர்.
- தமிழ்நாட்டில் **ரௌலட் சட்ட எதிர்ப்பு** நாள் 1919, ஏப்ரல் **6**–அன்று துக்கதினமாக அனுசரிக்கப்பட்டது. பல பகுதிகளில் கண்டன ஊர்வலங்கள் நடைபெற்றன. அப்போது பத்திரிகைப் பதிவுச் சட்டத்தை மீறி சென்னை நகரில் **“சத்யாக்கிரகி”** என்ற பத்திரிகையும் வெளியிடப்பட்டது.
- அரசாங்கத்தினால் தடை செய்யப் பட்டிருந்த நூல்களான காந்தியின் **“சர்வோதயம்”, “இந்திய சுயராஜ்யம்”** மற்றும் வீர சவாக்கரின் **“எரிமலை”** ஆகியவற்றைத் தமிழ்நாட்டுச் சத்தியாக்கிரகிகள் விற்பனை செய்தனர்.

## கிலாபத் இயக்கம்

- இந்திய முஸ்லீம்கள், காந்தியின் ஒத்துழைப்புடன் தொடங்கிய கிலாபத் இயக்கத்தில் தமிழ்நாடு ஆர்வத்துடன் கலந்து கொண்டது.
- சென்னை மாகாண காங்கிரஸ் மாநாடு 1919, ஆகஸ்டில் கூடியது. அலி சகோதரர்களை விடுதலை செய்யக் கோரும் தீர்மானத்த ராஜாஜி கொண்டு வந்தார். மேலும், **அக்டோபர் 17** அன்று அனுசரிக்கப்பட்ட **கிலாபத் தினத்துக்கு** தமிழ்நாட்டு இந்துக்களின் ஆதரவைப் பெற்றுத் தந்தார்.
- சென்னை நகரில், மௌலானா சவுகத் அலியின் தலைமையில் 1920, ஏப்ரல் 20–ல் கிலாபத் மாநாடு நடைபெற்றது. ராஜாஜி, கஸ்தூரிரங்க அய்யங்கார், பிரகாசம் ஆகியோர் அம்மாநாட்டில் கலந்து கொண்டு பேசினார்.
- சென்னை மாநில கிலாபத் இயக்கத்தை ராஜாஜியின் ஆதரவுடன் **யாகூப்** ஹாசன் 1920 மே மாதத்தில் தனது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்தார்.
- தமிழ்நாட்டுக்கு 1920, ஆகஸ்டில் வருகை தந்த காந்தி கிலாபத் இயக்கத்த ஆதரித்துப் பிரச்சாரம் செய்தார்.
- அன்றுவடஆற்காடு(இப்போதுவேலூர்) மாவட்டத்திலுள்ள **வாணியம்பாடி,** கிலாபத் இயக்கத்தின் உயிர்நாடியாகத் திகழ்ந்தார்.
- தமிழ்நாட்டில் நீதிக்கட்சியினரும், சுயாட்சி அங்கத்தினரும், லிபரல் கட்சியினரும் கிலாபத் இயக்கத்தை ஆதரிக்கவில்லை.

## ஒத்துழையாமை இயக்கம்

- 1919–ல் காந்தி ஒத்துழையாமை இயக்கத்தைத் துவக்கினார்.

- தமிழ்நாட்டில் ஒத்துழையாமை இயக்கம் **சி.ராஜகோபாலாச்சாரியின்** தலைமையில் நடைபெற்றது.
- ஒத்துழையாமை இயக்கத்தின் ஒரு பகுதியாக சென்னைத் தொழிலாளர் சங்கம்சார்பில்பக்கிங்காம்&கர்னாட்டிக் (பிஅண்ட்சி) தொழிற்சாலைத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர்.
- தமிழ்நாட்டில் காங்கிரஸ் கட்சியினர் கொண்டு வந்த சட்டமன்றப் புறக் கணிப்பு வெற்றி பெறவில்லை.
- அதற்குக் காரணம், நீதிக்கட்சி தேசிய நீரோட்டத்திலிந்து விலகி அரசாங்கத்தின் ஆதரவைப் பெற்று, ஒத்துழையாமை இயக்கத்தை ஒதுக்கிவிட்டு மக்களின் செல் வாக்கைப்பயன்படுத்தி ஆட்சியைக் கைப்பற்றியதுதான்.
- தமிழ்நாட்டு காங்கிரஸ்காரர்கள், 1921 ஜனவரி 10-ம் தேதி சென்னைக்கு வருகை தந்த **கானாட் கோமகனைப்** புறக்கணித்தனர்.
- கஸ்தூரி ரங்க அய்யங்கார், சீனிவாச அய்யங்கார், சத்தியமூர்த்தி, வ.உ. சிதம்பரனார், சிங்காரவேலு செட்டியார், டாக்டர் வரதராஜுலு நாயுடு போன்ற தலைவர்களின் முயற்சியால் ஒத்துழையாமை இயக்கம் பெரும் வீச்சுடன் நடைபெற்றது.
- மேலும் இந்து, சுதேசமித்திரன், தேசபக்தன், முகமதன் போன்ற பத்திரிகைகளும் இந்த இயக்கம் வளர உதவின.
- தமிழகத்தில் ஊர்வலங்களும், பொதுக் கூட்டங்களும் நடைபெற்றன. பல்லாயிரக் கணக்கில் மக்கள் சிறை சென்றனர்.
- ஒத்துழையாமை இயக்கத்தின் போது **மலபாரில்** நிகழ்ந்த **மாப்ளா கலகம்** தமிழ்நாட்டில்மோசமானவிளைவுகளை ஏற்படுத்தியது. அதனால் தமிழ்நாட்டில் கிலாபத், ஒத்துழையாமை இயக்கங்கள் வலுவிழந்து போயின.
- **சௌரி சௌராவில்** நடைபெற்ற வன்முறை நிகழ்ச்சியினால் காந்தியே ஒத்துழையாமை இயக்கத்தை விலக்கிக் கொண்டார்.

**சுயராஜ்ஜியக் கட்சி**

- இந்திய விடுதலைப் போராட்டம் தேக்க நிலையிலிருந்து போது சுயராஜ்ஜியக் கட்சியினர் சட்டமன்றத்துக்குள் ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்குவதென முடிவு செய்தனர்.
- தமிழ்நாட்டில் கஸ்தூரிரங்க அய்யங்கார், சீனிவாச அய்யங்கார், வரதராஜுலு நாயுடு, விஜயராகவாச்சாரி, ஏ. ரங்கசாமி அய்யங்கார் ஆகியோர் சுயராஜ்ஜியக் கட்சியில் சேர்ந்து சட்டமன்ற நுழைவை ஆதரித்தனர்.
- மத்திய சட்டமன்றத்திற்கு 1892, நவம்பர் 13 அன்று நடைபெற்ற தேர்தலில் தமிழ்நாட்டிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட சுயராஜ்யக் கட்சியினருள்ஏ.ரங்கசாமிஅய்யங்கார், ஆர்.கே. சண்முகம் செட்டியார், என். சீனிவாச அய்யங்கார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

- சென்னை மாநில சட்டமன்றத் தேர்தலில் சுயராஜ்யக் கட்சி 41 இடங்களைப் பெற்றாலும் கூட அமைச்சரவையை அமைக்க மறுத்து விட்டது. அதனால் டாக்டர் பி.சுப்பராயன் தலைமையில் சுயேட்சை அமைச்சரவை அமைக்கப்பட்டது.
- தமிழ்நாட்டில் சுயராஜ்ஜியக் கட்சி யினரால் இரட்டை ஆட்சியின் தீமைகளை எடுத்துக்காட்ட முடிந்ததே ஒழிய அதை செயலிழக்கச் செய்ய முடியவில்லை.

## நீல் சிலை சத்தியாக்கிரகம்

- சென்னை இராணுவப் பிரிவின் தலைவராயிருந்த கர்னல் நீல் 1857ஆம் ஆண்டு பெருங்கிளர்ச்சியை ஒடுக்குவதில் தீவிரமாகச் செயல் பட்டிருந்ததைப் பாராட்டிப் பிரிட்டிஷ் அரசாங்கம் சென்னையின் பிரதான பகுதியில் நீலின் சிலையை வைத்தது.
- விடுதலைப் போராட்டத்தின் போது அந்தச் சிலையை அகற்றுவதற்காக நெல்லை சோமயாஜுலுவின் தலைமையில் சத்தியாக்கிரகக் குழு துவக்கப்பட்டது.
- 1927, ஆகஸ்ட் 11-ல் தொடங்கிய நீல்சிலை அகற்றும் போராட்டத்திற்கு சுப்புராயலு நாயுடுவும், முகமது சாலியா ராவுத்தரும் தலைமை தாங்க, நலின் சிலையை உடைத்து சேதப்படுத்தினர்.
- ஆகஸ்ட் மாதம் துவக்கப்பட்ட நீல் சிலை சத்தியாக்கிரகம் டிசம்பர் வரை தொடர்ந்து நடைபெற்றது. தமிழ்நாட்டின் பல மாவட்டங்களிலிருந்து தொண்டர்கள் சென்னைக்கு வந்து அப்போராட்டத்தில் கலந்து கொண்டனர்.
- இராஜாஜி முதல்வரான பின்னர் 1937-ல் அச்சிலை அகற்றப்பட்டு அருங்காட்சியத்தில் வைக்கப்பட்டது.

## சைமன் குழு புறக்கணிப்பு

- சைமன் குழு, 1930, பிப்ரவரி 3-ல் பம்பாய் நகருக்கு வந்து சேர்ந்தபோது அதை எதிர்த்து இந்தியா முழுவதிலும் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது.
- இக்குழு சென்னைக்கு வந்த போது, **“சைமனே திரும்பிப் போ”** என்ற முழக்கம் எழுந்தது.
- சைமன் குழுவுக்கு எதிராகக் கருப்புக் கொடிகாட்டப்பட்டது. கண்டன ஊர்வலமும் கடற்கரைக் கூட்டமும் நடைபெற்றன.
- சைமன் குழுவிற்கு அளிக்கப்பட்ட அரசாங்க வரவேற்பில் டாக்டர் பி. சுப்புராயன் ரங்கநாத முதலியாரும், ஆரோக்கியசாமி முதலியாரும் பதவி விலகினர்.

## பூரண சுதந்திரம்

- 1927-ம் ஆண்டு சென்யையில் நடைபெற்ற காங்கிரஸ் கூட்டத்தில்தான் முதன்முறையாக பூரண சுதந்திரமே இந்தியாவின் குறிக்கோள் என அறிவிக்கப்பட்டது.
- 1930, ஜனவரி 26-ம் நாள் தேசமெங்கும் **பூரண சுதந்திர நாள்** கொண்டாப்பட்டது. தமிழ்நாட்டின் ஒவ்வொரு குடும்பத்திலும், ஊரிலும் அந்நாள் கொண்டாடப்பட வேண்டு

மென இராஜாஜி பத்திரிகைகளில் வேண்டுகோள் விடுத்தார்.

- சென்னையில் தேசியக்கொடி ஏற்றப்பட்டது. மாலையில் திருவல்லிக்கேணியில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அதில் பங்கேற்ற அறுபதாயிரத்திற்கும் மேற்பட்டோர் பூரண சுதந்திர சபதம் எடுத்தனர்.

## தமிழ்நாட்டில் சட்ட மறுப்பு இயக்கம்

- தமிழ்நாட்டில் சட்ட மறுப்பு இயக்கம் **இராஜாஜி** தலைமையில் நடை பெற்றது. ஊர்வலங்கள், பொதுக் கூட்டங்கள், மறியல்கள் நடைபெற்றன. உச்ச கட்டப் போராட்டமாக உப்பு சத்தியாகிரகம் நடைபெற்றது.
- 1930, ஏப்ரல் 30 அன்று **வேதாரண்யத்தில்** உப்பு காய்ச்சு வதற்காக இராஜாஜி தலைமையில் நூறு தொண்டர்கள் திருச்சியிலிருந்து புறப்பட்டனர்.
- சத்யாக்கிரகிகள், பாரதியாரின் **“அச்சமில்லை”** பாடலையும், இந்த வேதாரண்யம் யாத்திரைக்கென்றே நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை புனைந்த **“கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது”** என்ற பாடலையும் பாடியவாறே நடந்து சென்றனர்.
- தஞ்சை மாவட்ட கலெக்டராக அப்போதியிருந்த எ.ஜே.தார்ன் என்பவர் இப்போராட்டத்தை நசுக்க பல வழிகளில் முயன்றார். ஆனாலும் போராட்ட வீரர்களுக்குத் திருவையாறு, தஞ்சாவூர், கும்பகோணம் போன்ற நகரங்களில் உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது.
- வேதாரண்யத்தை அடைந்து தடையை மீறி உப்புக் காய்ச்சிய ராஜாஜி கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார்.
- அவரைத் தொடர்ந்து சர்தார் வேதரத்தினம் பிள்ளை, டாக்டர் ராஜன், திருமதி.ருக்மணி லட்சுமிபதி போன்ற தலைவர்கள் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தினர்.
- திருச்சியிலிருந்து இராஜாஜி தலைமை யில் உப்பு சத்தியாக்கிரகிகள் புறப்பட்ட அன்றே ஆந்திர கேசரி பிரகாசம் தலைமையில் சென்னை நகரில் உப்புச் சத்தியாக்கிரகப் போராட்டம் தொடங்கப் பட்டது. போராட்டத் தொண்டர்கள் அனைவரும் கைது செய்யப்பட்டனர்.
- காந்தி 1930, மே 5-ம் தேதி கைது செய்யப்பட்டு எரவாடா சிறையில் அடைக்கப்பட்டார். இதனால் நாடு முழுவதும் ஆர்ப்பாட்டங்கள் நடை பெற்றன.
- சென்னை மாநில சட்டமன்ற நியமன உறுப்பினரான திருமதி. முத்துலட்சுமி ரெட்டி, காந்தி கைது செய்யப்பட்டதைக் கண்டித்துத் தனது பதவியை ராஜினாமா செய்தார்.
- காந்தி கைது செய்யப்பட்ட நாளிலிருந்து தொடர்ந்து ஆறுமாத காலத்திற்குத் தமிழ்நாட்டில் சட்டமறுப்பு இயக்கம் தீவிரமாக நடைபெற்றது.

- 1932 ஜனவரி 26ல் சென்னையில் தடையை மீறி தேசிய **சுயராஜ்ஜிய தினம்** கொண்டாடப்பட்டது.
- இறுதியாக, 1934-ல் சட்டமறுப்பு இயக்கம் விலக்கிக் கொள்ளப்பட்டது. இந்த இயக்கம் தமிழ்நாட்டில் படித்தவர் களிடம், பாமர மக்களிடமும் அரசியல் விழிப்புணர்வை ஏற்படுத்தி தேசிய இயக்கம் வளர்ச்சியடைய உதவியது.

## தனிநபர் சத்தியாக்கிரகம்

- வார்தாவில் 1940, அக்டோபர் 13 அன்று கூடிய காங்கிரஸ் செயற் குழுக் கூட்டத்தில் காந்தியடிகள் தனிநபர் சத்தியாக்கிரகத் திட்டத்தை வெளியிட்டார்.
- அதன்படி, **தமிழ்நாட்டின் முதல் தனிநபர் சத்தியாக்கரகியாக டாக்டர் டி.எஸ்.எஸ். ராஜன்** என்பவர் சிறை சென்றார். இவரைத் தொடர்ந்து ராஜாஜி, சத்தியமூர்த்தி, டி.பிரகாசம், ம.பொ. சிவஞானம் உள்ளிட்ட பல தலைவர்கள் தனிநபர் சத்தியாக் கிரகத்தின் போது சிறை சென்றனர்

## வெள்ளையனே வெளியேறு இயக்கம்

- 1942, ஆகஸ்ட் 7,8 தேதிகளில் **பம்பாயில்** கூடிய காங்கிரஸ் கூட்டத்தில் வெள்ளையனே வெளியேறு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.
- 1942 ஆகஸ்டு 9-ம் தேதி **காந்தியடிகள்** வெள்ளையனே வெளியேறு இயக்கத்தைத் தொடங்கினார். அதைத் தொடர்ந்து காந்தி உட்பட பல முக்கிய காங்கிரஸ் தலைவர்கள் கைது செய்யப்பட்டனர்.
- வெள்ளையனே வெளியேறு இயக்கத்தைத் தமிழ்நாட்டில் பரப்பியவர் **காமராஜராவார்.**
- காந்தி கைது செய்யப்பட்ட செய்தி எட்டியவுடன் சென்னையில் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. கடைகள் அடைக்கப்பட்டன. தொழிற்சாலைகள் மூடப்பட்டன. கல்விக் கூடங்கள் காலியாக இருந்தன.
- தஞ்சை மாவட்டத்தில் காங்கிரஸ் கலகக்காரர்கள் பல குழுக்களாகப் பிரிந்து கிளர்ச்சியில் ஈடுபட்டனர்.
- கோயம்புத்தூரில் பஞ்சாலைத் தொழிலாளர்கள் வேலைக்குச் செல்லாமல் தடையை மீறி ஊர்வலம் சென்றனர்.
- மதுரை மாவட்டம் முழுவதும் கடை யடைப்புச் செய்யப்பட்டது. தீயிடல், தந்திக் கம்பங்களை அறுத்தல், பாலங்களைத் தகர்த்தல் போன்ற வன்முறைச் செயல்கள் தமிழகம் முழுவதும் பரவலாக நிகழ்ந்தன.
- வன்முறை அதிகமாகக் காணப்பட்ட இந்த ஆகஸ்ட் போராட்டம் அரசாங்கத்தின் அடக்குமுறை நடவடிக்கைகளால் மூன்று மாதமே நீடித்தது.

### இந்தியா சுதந்திரம் அடைதல்

- நீண்ட போராட்டத்திற்குப் பின்னர், 1947. ஆகஸ்ட் 15 அன்று இந்தியா விடுதலை அடைந்தது. ஆங்கிலேயரின் யூனியன் ஜாக்கொடி இறக்கப்பட்டு, இந்தியாவின் மூவர்ணக் கொடி பறக்க விடப்பட்டது.
- இந்தியா விடுதலையடைந்த போது, ஓமாந்தூர் இராமசாமி ரெட்டியார் தமிழக முதலமைச்சராக இருந்தார். விடுதலை நாளை நாட்டு மக்கள் மகிழ்ச்சி பொங்க, விழாவாகக் கொண்டாடினர்.

• • •



# தமிழகத்தில் சமூக– அரசியல் இயக்கங்களின் வளர்ச்சி



## முன் வரலாறு

- 1854–ம் ஆண்டு பிறப்பிக்கப்பட்ட நிலை ஆணை அரசாங்கப் பதவிகள் ஒருசில செல்வாக்குமிக்க குடும்பங்களின் ஏகபோக உரிமையாக இருக்கக் கூடாது என்று கூறியது.
- 1871–ம் ஆண்டு வெளியிடப்பட்ட மக்கள் கணக்கீட்டு மேற்பார்வையாளர் கோர்னிங் பரிந்துரை படி ஒவ்வொரு பிரச்சனையையும் பிராமணக் கண்ணாடி மூலம் பார்ப்பது நல்லதல்ல எனவும் இந்து முஸ்லீம் எண்ணிக்கைக்கு ஏற்ப அரசாங்க பதவிகளில் வரம்பு விதிக்க வேண்டும் எனவும் கூறப்பட்டது.
- அயோத்திதாசப் பண்டிதர் என்பவரால் திராவிடர் முன்னேற்றித்திற்காக 1876–ம் ஆண்டு அத்விதாநந்தா சபை என்ற அமைப்பும் திராவிட பாண்டியன் என்ற இதழும் வெளியிடப்பட்டது. மேலும் இவரால் 1891–ல் திராவிட மகாஜன சபை தோற்றுவிக்கப்பட்டது.
- இரட்டைமலை சீனிவாசன் என்பவரால் 1891–ல் பறையர் மகாஜன சபை தோற்றுவிக்கப்பட்டு 1892–ம் ஆண்டு ஆதிதிராவிட மகாஜன சபை என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டது.
- 1908–ம் ஆண்டு நீதிபதி சங்கரன் நாயர் என்பவர் வர்ண –ஜாதி முறை அகற்றப்படாத வரை அரசியல் முன்னேற்றம் சாத்தியமில்லை என்று கூறினார்.
- 1909–ம் ஆண்டு சி.சுப்ரமணியம், எம்.புருஷோத்தமன் என்ற இரு வழக்கறிஞர்களால் 'சென்னை பிராமணரல்லாதார் சங்கம்' துவக்கப்பட்டது. இதன் நோக்கம் பிராமணரல்லாதோரிடையே கல்வியை பரப்புவதாகும்.
- 1912–ல் சரவணப்பிள்ளை, வீராசாமி, துரைசாமி என்பவர்களால் சென்னை கூட்டமைப்புக் குழு உருவாக்கப்பட்டது. இதன் செயலாளராக இருந்த சி.நடேச முதலியார் சென்னையில் கல்வி பயில தங்கியிருந்த பிராமணரல்லாத

மாணவர்களுக்காக திராவிட விடுதி ஒன்றை நடத்தினார். இந்த அமைப்பே பின்னர் சென்னை திராவிடர் சங்கம் என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டது.

- 1912-ம் ஆண்டு அரசாங்க பணிகளுக்காக அமைக்கப்பட்ட ராயல் கமிஷனுக்கு பி.தியாகராய செட்டி என்பவரால் சாதிவாரியான விகிதாச்சார பிரதிநிதித்துவம் பற்றி வலியுறுத்தி கோரிக்கை அனுப்பப்பட்டது.
- 1916-ம் ஆண்டு தொடங்கப்பட்ட தன்னாட்சி கழகத்தில் பிராமணர் செல்வாக்கு மேலும் உயர்ந்தது. அதே ஆண்டு நடைபெற்ற இம்பீரியல் சட்ட மன்றத்துக்கான தேர்தலில் பிராமணரல்லாத வேட்பாளர்கள் அனைவரும் தோற்கடிக்கப்பட்டது வேதனைக் குரியதானது. இவர்கள் காங்கிரஸை சேர்ந்தவர்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

## தோற்றம்

பிராமணல்லாதவர்கள் முன்னேற்றத்திற்காக சென்னை விக்டோரியா பொது மண்டபத்தில் 1916 நவம்பர் 20-ல் தென்னிந்திய நல உரிமையாளர் சங்கம் வேலைவாய்ப்பு மற்றும் கல்வியில் வகுப்புவாரி பிரதிநிதித்துவ அடிப்படையில் இட ஒதுக்கீடு என்ற முக்கிய நோக்கங்கள் அடிப்படையில் தொடங்கப்பட்டது. டி.எம். நாயர், பனகல் அரசர், தியாகராய செட்டியார், நடேச முதலியார் ஆகியோர் முக்கிய பிரமுகர்கள் ஆவர்.

1916 டிசம்பர் மாதம் பி.தியாகராய செட்டி என்பவரால் வரலாற்று சிறப்புமிக்க பிராமணரல்லாதோர் பிரகடனம் வெளியிடப்பட்டது. இப்பிரகடனத்தில் மொத்த மக்கள் தொகையில் வெறும் 37% மட்டுமே உள்ள பிராமணர்கள் அரசாங்க பதவிகளில் அதிக இடங்களிலும், முக்கிய பதவிகளிலும் உள்ளனர் என்று கூறப்பட்டது. இதுவே பின்னர் “பிராமணரல்லாதாரின் மாக்னா கார்டா” என்றழைக்கப் பட்டது.

*டைம்ஸ் ஆப் இந்தியா நாளிதழ் இந்த பிரகடனத்தை செட்டியாரின் பிரகடனம் என்று குறை கூறியது. இந்து, நியூஏஜ், இந்து நேசன் போன்ற பத்திரிக்கைகளில் நீதிக்கட்சி பெரிய அளவில் விமர்சிக்கப்பட்டது.*

### நீதிக்கட்சி

தென்னிந்திய நல உரிமை சங்கம் தனது கொள்கைகளை மக்களிடையே பரப்ப மூன்று பத்திரிகைகளை நடத்தி வந்தது.

ஜஸ்டிஸ் – ஆங்கிலம் – டி.எம்.நாயர், எம்.எஸ். பூர்ணலிங்கம்

ஆந்திர பிரகாசா – தெலுங்கு – பார்த்தசாரதி நாயுடு

திராவிடன் – தமிழ் – பக்தவத்சலம் பிள்ளை

இதன் ஆங்கில இதழான ஜஸ்டிஸ் என்ற பெயரிலேயே ஜஸ்டிஸ் பார்ட்டி என்றழைக்கப் பட்டது. இதுவே தமிழில் நீதிக்கட்சி என அழைக்கப்பட்டது.

நீதிக்கட்சியின் முதல் பிராமணல்லாதார் மாவட்ட மாநாடு 1917 ஆகஸ்டு 19-ம் நாள் கோயம்பத்தூர் ஒப்பணக்கார வீதியில் நடைபெற்றது. முதல் மாநில மாநாடு 1917 டிசம்பர் 28,29 சென்னை வெல்லிங்டன் திரை அரங்கில் நடைபெற்றது.

1917–டிசம்பர் 14ல் மாண்டேகுவை சந்தித்து பிராமணர் உள்ளிட்ட அனைத்து வகுப்பினர்க்கும் விகிதாச்சார பிரதிநிதித்துவம் கோரப்பட்டது.

### நீதிக்கட்சியின் ஆட்சி அமைப்பு

நீதிக் கட்சியின் நிர்வாகிகள் 1917 அக்டோபர் மாதம் தேர்ந்தெடுக்கப்பட்டனர். நீதிக்கட்சி வெளியிட்ட கொள்கை அறிக்கையே அரசியல் சட்ட வரைவாகக் கருதப்பட்டது.

நீதிக்கட்சிக்கு ஒரு தலைவரும், நான்கு துணைத் தலைவர்களும், ஒரு பொதுச் செயலரும், ஒரு பொருளாளரும் இருந்தனர். 25 உறுப்பினர்களைக் கொண்ட செயற்குழு கொள்கை முடிவுகளை செயல்படுத்தியது.

1920 தேர்தலுக்குப் பிறகு கட்சிக் கொரடா என்ற புதிய கட்சிப்பதவி உருவாக்கப்பட்டது.

நீதிக்கட்சியின் முதல் தலைவராக சர். தியாகராய செட்டியும், முதல் பொதுச் செயலாளராக ஆற்காடு ராமசாமியும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### சட்டமன்ற தேர்தல் 1920

1919– மிண்டோ மார்லி சீர்திருத்தங்கள் அடிப்படையில் தேர்தல் நடத்தப்பட்டது. தொகுதிகள் வகுப்புவாரி, தொகுதிகள் சிறப்பு தொகுதிகள் ஒதுக்கப்பட்ட தொகுதிகள் என பிரிக்கப்பட்டிருந்தன. சென்னை சட்ட மன்றத்தில் 127 உறுப்பினர்கள் இருந்தனர். இந்துக்களில் 98பேர் 61 தொகுதிகள் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்டனர். இரட்டை ஆட்சி முறையை எதிர்த்து காங்கிரஸ் தேர்தலில் போட்டியிடவில்லை. பலமிக்க எதிர்க்கட்சி இன்மையில் நீதிக்கட்சி 63 இடங்களில் வெற்றி பெற்றது.

அக்காலகட்டத்தில் சொத்து மதிப்பு உடையவர்கள் மட்டுமே வாக்காளர்களாக அங்கீகரிக்கப்பட்டனர். மொத்த மக்கள் தொகை 40 மில்லினில் 12, 48, 156 பேர் வாக்களிக்கத் தகுதி பெற்றிருந்தனர். சராசரியாக 24.97% வாக்கு பதிவாயிற்று.

### முதல் அமைச்சரவை (1920-23)

- ▶ பி.தியாகராய செட்டி பதவியேற்க மறுத்தமையால் ஆளுநர் வெல்லிடன் அமைப்பின் பேரில் ஏ.சுப்பராயலு நாயுடுவின் தலைமையில் 1920 டிசம்பர் 7–ம் நாள் அமைச்சரவை அமைக்கப்பட்டது. இவர் உடல்நிலை காரணமாக பதவி விலகியதால் 1921 ஜுலை 11 பனகல் அரசர் பொறுப் பேற்றார்.
- ▶ 1921–ல் தேர்தலில் போட்டியிட பெண் களுக்கு விதிக்கப்பட்டிருந்த தடை நீக்கப்பட்டது.
- ▶ 1920–ல் சென்னை ஆயிரம் விளக்கு பகுதியில் பள்ளிகளில் இலவச உணவு வழங்கப்பட்டது. பின்னர் இதுவே இலவச மதிய உணவுத் திட்டமாக விரிவடைந்தது.
- ▶ பறையர், பஞ்சமர் என்ற சொற்கள் நீக்கப்பட்டு அவர்கள் ஆதி திராவிடர் என்றழைக்கப்பட்டனர்.
- ▶ 1922 டிசம்பர் 18ல் இந்து அறநிலைய சட்ட மசோதா கொண்டு வரப்பட்டது.
- ▶ தாழ்த்தப்பட்டோர் நலன் பாதுகாப்பிற்காக

ஐ.சி.எஸ். அதிகாரி நியமிக்கப்பட்டார்.

- முதல் அமைச்சரவையில் தமிழர் ஒருவர் கூட இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

### இரண்டாவது அமைச்சரவை (1923-26)

- முதல் அமைச்சரவை 1923 செப் 11 – முடிந்து 1923 அக். 31–ல் தேர்தல் நடத்தப்பட்டது. சுயராஜ்ஜியக் கட்சி போட்டியிட்டதால் 44 இடங்களில் மட்டுமே வெற்றி பெற்றது.
- தனிப்பெரும்பான்மை அமையாததால் நியமன உறுப்பினர் ஆதரவுடன் 1923 நவம்பர் 19ல் பனகல் அரசர் தலைமையில் இரண்டாம் அமைச்சரவை பதவி ஏற்றது.
- 1924–ல் பணியாளர் நியமன வாரியம் அமைக்கப்பட்டது. இதுவே பின்னர் மாநில பணியாளர்கள் தேர்வாணையமாக உருமாற்றம் அடைந்தது.
- 1925–ன் தெலுங்கு மொழியின் வளர்ச்சிக்காக ஆந்திர பல்கலைக் கழகம் அமைக்கப்பட்டது.
- 1922–ல் கொண்டுவரப்பட்ட இந்து அறநிலைய மசோதா 1925ல் நிறைவேற்றப்பட்டு சட்டமாக்கப்பட்டது. இதன்படி கோயில்களில்மூலம்வரும்வருமானம் பொதுப்பணிக்கு பயன்படுத்தப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

### மூன்றாம் அமைச்சரவை

- 1926–ம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில் எஸ்.சத்யமூர்த்தி தலைமையில் களமிறங்கிய சுயராஜ்ஜியக் கட்சி 41 இடங்களிலும், நீதிக்கட்சி 21–இடங்களிலும் வெற்றி பெற்றனர்.
- தனிப் பெரும்பான்மை இருந்தும் சுயராஜ்ஜியக் கட்சி ஆட்சி அமைக்க மறுத்து விட்டதாலும், நீதிக்கட்சிக்கு பெரும்பான்மை இல்லாததாலும், சுயேட்சையாக போட்டியிட்ட "கருப்பு குதிரை" சுப்பராயன் என்பவர் நீதிக்கட்சி மற்றும் மற்ற சுயேட்சைகள் ஆதரவுடன் ஆட்சி அமைத்தனர்.
- இவரது அமைச்சரவையில்தான் முதன் முதலாக ஒரு பெண் அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ளப்பட்டார். இவரது பெயர். Dr. முத்துலட்சுமி ரெட்டி. இவரது முயற்சி மூலம் பெண் விடுதலை சட்டங்கள் இயற்றப்பட்டன. 1930–ல் தேவதாசி முறை ஒழிக்கப்பட்டது.
- 1929–ல் தமிழ்கல்வி வளர்ச்சிக்காக அண்ணாமலை பல்கலைக் கழகம் தொடங்கப்பட்டது.
- மகத்தான சாதனையாக முத்தையா முதலியார் என்பவரால் வகுப்புவாரி பிரதிநிதித்துவம் அறிவியல் பூர்வமான முறையில் வகுக்கப்பட்டது. இது கோட்டா முறை எனப்பட்டது.

### நான்காவது அமைச்சரவை (1930 - 34)

- 1930–ம் ஆண்டு வாக்கில் மக்களிடையே செல்வாக்கு இன்மையால் பிராமணர்களும், கட்சியில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். அதே ஆண்டு நடைபெற்ற தேர்தலில் நீதிக் கட்சி 35 இடங்களில் வெற்றி பெற்றது.

- பெரும்பான்மை இல்லாததால் நியமன உறுப்பினர் ஆதரவோடு முனுசாமி நாயுடு தலைமையில் 1930 அக்.17ல் ஆட்சி அமைத்தது.
- உட்கட்சி பூசல் காரணமாக 1932 நவம்பர் 5-ம் தேதி பொப்பலி அரசர் முதலமைச்சராக பொறுப்பேற்றார்.
- இக்காலக்கட்டத்தில் ஜமின்தாரர்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு மக்கள் ஏமாற்றப் பட்டனர். எனவே மக்களிடையே கட்சியின் செல்வாக்கு சரிய தொடங்கியது.

## ஐந்தாவது அமைச்சரவை (1934-37)

1934-ம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில் நீதிக்கட்சி படுதோல்வி அடைந்தாலும் தனிப் பெரும்பான்மையுடன் வெற்றிபெற்ற சுய ராஜ்ஜியக் கட்சி ஆட்சி அமைக்காததால் நீதிக்கட்சி பொப்பிலி அரசர் தலைமையில் ஆட்சி அமைத்தது.

பெரியாரின் ஈரோடு திட்டத்தை நீதிக்கட்சி ஏற்றுக் கொண்டதால் பெரியாரின் ஆதரவு கிடைத்தது.

## திராவிடர் கழகம்

1935 இந்திய அரசுச்சட்டத்தின் படி நடைபெற்ற 1937-ம் ஆண்டு தேர்தலில் காங்கிரஸ் வெற்றி பெற்று, ராஜாஜி தலைமையில் ஆட்சி அமைத்தது.

1938 டிசம்பர் 29-ம் ஆண்டு பெரியார் பெல்லாரி சிறையில் இருந்தபோது நீதிக் கட்சியின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

தேர்தல் பாதையில் இருந்து நீதிக்கட்சியை விலக்கிய பெரியார் சமூக சீர்த்திருத்த போராட்டங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்தார்.

இதனையடுத்து 1944 ஆகஸ்டு 27-ம் தேதி சேலத்தில் நடந்த மாநாட்டில் நீதிக்கட்சி திராவிடர் கழகம் என பெயர் மாற்றம் செய்யப்பட்டு அதன் சின்னமான தராசு மாற்றப்பட்டு கறுப்பு பிண்ணனியில் சிகப்பு வட்டம் பொறித்த கொடி அறிமுகப்படுத்தப்பட்டது.

இதன் பின்னர் நீதிக்கட்சி பி.ராமச்சந்திர ரெட்டி தலைமையிலும் (1944-45) பி.டி.ராஜன் தலைமையில் (45-47) பெயரளவுக்கு செயல் பட்டு மறைந்தது.

> *"பிரதிநிதித்துவம் இன்றேல் வரியில்லை" - சி.நடேச முதலியார் (சமரச சத்தர்)*
> *"வீட்டுக்குள் நுழைந்த திருடன் போன்று ஆரியர்கள் திராவிடர்கள் சொத்தை சூறையாடி விட்டனர்". டி.எம். நாயர்*

## நீதிக்கட்சி வீழ்ச்சிக்கான காரணங்கள்

- வகுப்புவாரி பிரதிநிதித்துவம் என்ற ஒற்றைக் குறிக்கோள் கட்சியாக செயல் பட்டது.
- ஆங்கிலேயருக்கு முழு ஆதரவு அளித்தது.
- உயர் வகுப்பாரின் உயர்வுக்கு முன்னுரிமை. குறிப்பாக சிறுபான்மை யினர், ஆதிதிராவிடர் ஏமாற்றப் பட்டனர்.
- அதிகார ஆசையின் காரணமாக எழுந்த கட்சி பூசல் மற்றும் மோதல் போக்குகள்.
- நீதிக்கட்சி தலைவர்களின் ஆடம்பர வாழ்க்கை முறை
- ஆட்சியாளர்களின் யதேச்சதிகாரப் போக்கு மற்றும் காங்கிரஸ் அசுர வளர்ச்சி.

*ஜாலியன் வாலாபாக் படுகொலையைக் கூட நீதிக்கட்சி எதிர்க்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.*

## சென்னை மகாஜன சங்கம்

- நீதிக்கட்சியின் நிலைப்பாட்டை அறிந்து, அதற்கு போட்டியாக பிராமணரல்லாத காங்கிரஸ்காரர்களால் 1917 செப். 20ல் துவக்கப்பட்டது.
- பி.கேசவ பிள்ளை தலைவராகவும், ஈ,வெ.ராமசாமி நாயக்கர் துணை தலைவராகவும், திரு. வி. கல்யாண சுந்தரனார், பி.வரதராஜீலு நாயுடு போன்றோர் முக்கிய உறுப்பினராகவும் இருந்தனர்.
- இந்தியன் பேட்டரியாட் என்ற ஆங்கில இதழும் தேச பக்தன் என்ற தமிழ் இதழும் வெளியிடப்பட்டது.
- தாழ்த்தப்பட்டோர் மற்றும் பிற்படுத்தப் பட்டோர் நலனுக்காக பாடுபடுவதோடு ஆங்கில ஆட்சியையும் எதிர்ப்பதை கொள்கையாக கொண்டது.

## சுயமரியாதை இயக்கம்

- தமிழ்நாட்டின் மிகச் சிறந்த சீர்த் திருத்த வாதியான பெரியார் ஈ.வெ. இராமசாமி நாயக்கர் 1925-ம் ஆண்டு சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்தார்.
- சுயமரியாதை இயக்கம், பிற்படுத்தப் பட்ட, தாழ்த்தப்பட்ட சமூகத்தினரின் சுயமரியாதையை வலியுறுத்தியதுடன், அவர்களைச் சமூதாயத்தின மேல் மட்டத்திற்கு உயர்த்தவும் பாடுபட்டது.
- மதம், ஜாதி, அரசியலில் மற்றும் சமுதாயத்தில் பிராமணர்களின் ஆதிக்கத்தை இவ்வியக்கம் கடுமையாக எதிர்த்தது.
- மூட நம்பிக்கைகளையும், பழமை வாதத்தையும் ஒழிக்கப் பாடுபட்டது.
- பெண்கல்வி, விதவைகள் மறுமணம், கலப்புத் திருமணம் மற்றும் குழந்தைத் திருமணமுறை ஒழிப்பு ஆகியவற்றுக்காகப் போராடியது.
- சுயமரியாதை இயக்கத்தின் முதல் மாநாடு 1929-ம் ஆண்டு ஆகஸ்ட் 25 அன்று **செங்கல்பட்டில்** நடைபெற்றது. இந்த மாநாட்டில் வகுக்கப்பட்ட கொள்கைகள் திராவிட இன வரலாற்றில் முக்கியத்துவம் வாய்ந்தவை. இந்த மாநாட்டில்தான் ஜாதி ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்பு மற்றும் பெண்ணுரிமைக்கான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.
- ம.சிங்காரவேலரின் ஆலோசனைப்படி 1932 டிசம்பரில் “சுயமரியாதை சமதர்ம திட்டம்” ஒன்றைப் பெரியார் உருவாக்கினார்.
- அரசியலில் பிராமணர்களின் ஆதிக்கத்தைக் குறைக்கவும், தன்மான இயக்கக் கொள்கைகளைச் சட்டமாக்கவும், பொருளாதாரப் பொது உடைமையை ஏற்படுத்தவும் சுய மரியாதைச் சமதர்மத் திட்டத்தை அவர் செயல்படுத்தினார்.
- இவ்வியக்கம், ஓர் அங்கீகாரம் பெற்ற அமைப்பாகச் செயல்பட விரும்பியதால்

1952, செப்டம்பர் 29-ல் **பெரியார் சுயமரியாதைப் பிரச்சார இயக்கம்** என்ற பெயரில் பதிவு செய்யப்பட்டது.

- சுயமரியாதை இயக்கத்தின் சார்பில் வெளிவந்த புரட்சி என்ற இதழுக்கு முதன் முதலில் **எஸ்.ஆர். கண்ணம்மாள்** என்பவர் பதிப்பாளராக நியமிக்கப்பட்டார். இவரே **தமிழகத்தின் முதல் பெண் பதிப்பாளராவார்.**
- பெரியார், **'குடியரசு'** இதழை 1925, மே 2-ம் நாளன்று தொடங்கினார். அவ்விதழை அச்சடிக்கும் அச்சகத்திற்கு **"உண்மை விளக்க அச்சகம்"** என்று பெயரிட்டார். முதல் இதழைத் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள் வெளியிட்டார்.
- ஈரோட்டில் 1930-ல் நடைபெற்ற இவ்வியக்கத்தின் மாநாட்டில் **"மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் சாதிப் பெயர்களைச் சேர்க்கக் கூடாது"** என்று வேண்டுகோள் விடுக்கப்பட்டது.
- இந்திய சமூகத்தில் சாதி மதப் பிரிவு களைக் குறிக்கும் குறிப்புகளை நீக்க வேண்டுமென்ற கோரிக்கை, 1932-ல் வெளியிடப்பட்ட **சுயமரியாதை வேலைத் திட்டத்தின்** மூலம் முன் வைக்கப்பட்டது.
- இவ்வியக்கத்தால் அறிமுகப்படுத்தப்பட்ட திருமண முறை, **"சுயமரியாதைத் திருமணம்"** எனப்படுகிறது. இம்முறையில் வழக்கமாகப் பின்பற்றப் பட்டு வரும் நடைமுறைகளான பிராமண புரோகிதர் சமஸ்கிருத மந்திரம் ஓதி திருமணம் செய்வித்தல், தாலி கட்டுதல் போன்ற சடங்குகள் இன்றி திருமணம் எளிமையான நடத்தப்படுவதற்கான நடைமுறைகள் இடம்பெற்றிருந்தன.
- பேரறிஞர் அண்ணா முதல்வரானதும், சுயமரியாதைத் திருமணங்களுக்கு சட்டப்படி அங்கீகாரம் அளிக்கும் பொருட்டு திருமண சட்டத்தில் 7(அ) என்ற புதிய பிரிவை இணைத்து இந்து திருமணச் சட்டம் கொண்டுவரப்பட்டது. இச்சட்டம், 1968, ஜனவரி 20 முதல் நடைமுறைக்கு வந்தது.



# தமிழகத்தின் சுதந்திர போராட்ட வீரர்கள்

## தீரன் சின்னமலை

- தமிழக விடுதலைப் போரில் கட்டபொம்மன், ஊமைத்துறை, மருது சகோதரர்கள் ஆகியோரை ஆங்கிலேயர் அழித்தபின் கொங்கு நாட்டில் தீர்த்தகிரி என்ற வீரர் ஆங்கிலேயரை எதிர்த்துப போரிட்டார்.
- **1799** முதல் **1805** வரை ஆங்கிலேயரை எதிர்த்து நின்ற தீர்த்தகிரி ஈரோடு மாவட்டத்திலுள்ள மேலப்பாளையம் என்ற சிற்றூரில் **1756-ம்** ஆண்டு பிறந்தார்.
- **1799-ம்** ஆண்டு திப்பு சுல்தான் மரணமடைந்த போது, கோவைப் பகுதிகளைக் கைப்பற்ற வந்த **கர்னல் மேக்ஸ்வெல்** தலைமையிலான ஆங்கிலப்படையை காவிரிக் கரையில் எதிர்த்து சின்னமலை வெற்றி பெற்றார்.
- பின்னர் கொங்கு நாட்டில் **“ஓடாநிலை”** என்னும் ஊரில் ஒரு கோட்டையைக் கட்டி, படையைத் திரட்டி ஆங்கிலேயரை எதிர்த்துப் போரிட்டார். ஓடாநிலைப் போரிலும் ஆங்கிலேயர் சின்னமலையிடம் தோல்வியுற்றனர்.
- சின்னமலையை போரில் வெல்ல முடியாது என்பதை உணர்ந்த ஆங்கியேலர் அவரை சூழ்ச்சியால் வெல்ல முயன்றனர்.
- சின்னமலையின் சமையல்காரன் ஆங்கிலேயரின் சூழ்ச்சிக்கு உதவிட, சின்னமலை சாப்பிடும் போது அவரைக் காட்டிக் கொடுத்தான். பின்பு ஆங்கிலேயர் சின்னமலையை சங்ககிரியில் தூக்கிலிட்டனர்.
- தமிழகத்தில் கடைசியாக ஆங்கிலேயரை எதிர்த்து நின்றவர் தீரன் சின்னமலை என்று புகழப்பட்ட தீர்த்தகிரியாவார்.

## வ.உ. சிதம்பரனார்

- சிதம்பரனார் ஒட்டப்பிடாரம் என்ற ஊரில் உலகநாதபிள்ளை – பார்வதி தம்பதியரின் மகனாக, **1872-ம்** ஆண்டு செப்டம்பர் 5-ம் நாள் பிறந்தார்.

- அடிப்படைக் கல்வியை ஒட்டப் பிடாரத்திலும், உயர்நிலைக் கல்வியை தூத்துக்குடியிலும், சட்டக் கல்வியைத் திருச்சியிலும் பெற்று **1895**-ல் வழக்கறிஞரானார்.
- இவர் பாலகங்காதர திலகரால் கவரப்பட்டு **1905**-ம் ஆண்டு காங்கிரஸில் இணைந்தார்.
- இவர் தூத்துக்குடியில் **சுதேசிப் பண்டக சாலையையும், தருமசங்க நெசவு சாலையையும்** நிறுவினார்.
- வ.உ.சி.யின் சுதந்திரப் போராட்ட நடவடிக்கைகளால் எரிச்சலடைந்த ஆங்கிலேய அரசு **1908**-ம் ஆண்டு மார்ச் **9**-ம் நாள் பின் சந்திரபாலரின் விடுதலைக் கொண்டாட்டத்தின் போது அரசாங்கத்தை அவமதித்ததாகவும், சுதந்திரத்திற்காக பொதுமக்களை தூண்டியதாகவும் கூற, இவர் மேல் வழக்கு பதிவு செய்து இரட்டை ஆயுள் தண்டனையை வழங்கியது.
- அரச நிபந்தனைக்கு **20** ஆண்டுகள், சுப்பிரமணிய சிவாவுக்கு உடந்தையாக இருந்ததற்கு **20** ஆண்டுகள் ஆக மொத்தம் **40** ஆண்டுகள் அந்தமான் சிறையில் இருக்க வேண்டும் என்று தீர்ப்பளித்தவர் திருநெல்வேலி ஜில்லா செஷன்ஸ் நீதிபதி ஏ.எஃப்.ஃபின்ஹே
- அந்தத் தீர்ப்பினை எதிர்த்து சென்னை உயர்நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்யப்பட்டது. முறையீட்டின் போது அவரை அந்தமான் அனுப்ப இயலாது என்பதால் கோவைச் சிறையில் அடைக்கப்பட்டார். அங்குதான் அவர் செக்கிழுக்க வைக்கப்பட்டார்.
- இந்திய அரசு இவரது பிறந்தநாள் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு செப்டம்பர் **5,1972**-ல் **சிறப்பு அஞ்சல் தலையை** வெளியிட்டுள்ளது. பிப். 2011-ல் இந்திய அரசு **தூத்துக்குடி** துறைமுகத்திற்கு **வ.உ. சிதம்பரனார் துறைமுகம்** என்று பெயர் வைத்து சிறப்பு செய்துள்ளது.
- இவர் **1906**-ம் ஆண்டு அக்டோபர் திங்களில் பாண்டியத்துரைத்தேவரை தலைவராகக் கொண்டு தூத்துக்குடியில் **"சுதேசி நாவாய்ச் சங்கம்"** என்கிற கம்பெனியைத் தொடங்கினார். அதன் சட்ட ஆலோசகராக சேலம் சி.விஜய ராகவாச்சாரியரும், அதன் செயலாளராக சிதம்பரனாரும் தகழ்ந்தனர்.
- **காலியோ** மற்றும் **லாவோ** என்ற இரு கப்பல்களை வாங்கி தூத்துக்குடிக்கும் இலங்கைக்கும் இடையே இயக்கினார்.
- இவர் **மெய்யறிவு, மெய்யறம்** ஆகிய நூல்களை எழுதியதுடன் **விவேகபானு, இந்துநேசன்** ஆகிய இதழ்களில் ஆசிரியராகவும் விளங்கினார்.
- தென்னாட்டுத் திலகர், கப்பலோட்டிய தமிழன், செக்கிழுத்த செம்மல் என்றெல்லாம் புகழப்பட்ட சிதம்பரனார் 1936-ம் ஆண்டு நவம்பர் 18-ம் நாள் இயற்கை எய்தினார்.

### சுப்ரமணிய சிவா

- சுப்பிரமணிய சிவா திண்டுக்கல் மாவட்டத்தில் உள்ள வத்தலகுண்டு என்ற ஊரில் **1884**-ம் ஆண்டு அக்டோபர் **14**-ம் நாள் பிறந்தார்.
- பிராமண குடும்பத்தில் பிறந்த சிவா கோவையில் தனது படிப்பை முடித்த பின்பு, சிவகாசி காவல் நிலையத்தில் எழுத்தாளராகச் சேர்ந்தார்.
- இந்திய சுதந்திரப் போராட்டத்தில் இணைந்த பின் வ.உ.சிதம்பரனாரும், பாரதியாரும் இவரது நெருங்கிய நண்பர்களாக இருந்து போராட்டத்தில் ஈடுபட்டனர்.
- **1908**-ம் ஆண்டு வ.உ.சிஉடன் இணைந்து தடையை மீறி ஊர்வலம் நடத்தியதால் **10** ஆண்டுகள் சிறைத் தண்டனை பெற்றார் சிவா.
- பின்னர் தண்டனை **6** ஆண்டுகளாகக் குறைக்கப்பட்டது. சிறையில் பல இன்னல்களை அனுபவித்த சிவாவிற்கு **தொழுநோய்** தொற்றியது.
- சுப்பிரமணிய சிவா **ஞானபானு, பிரபஞ்சமித்திரன், இந்திய தேசாந்திரி** ஆகிய இதழ்களை வெளியிட்டார். சச்சிதானந்த சிவம், ஞானரதம் ஆகிய நூல்களை எழுதினார்.
- சிவாஜி மற்றும் ராஜா தேசிங்கு ஆகிய நாடகங்களையும் வெளியிட்டார்.
- **"சுதந்திரானந்தா"** என்ற புனைப் பெயரை சூட்டிக் கொண்ட சிவா தருமபுரி மாவட்டத்திலுள்ள பாப்பாராப்பட்டியில் பாரதியார் **ஆசிரமத்தை** நிறுவினார். அங்கு தேசபக்தர்களுக்கு நாட்டு விடுதலைப் போருக்கான பயிற்சி யளித்தார்.
- பத்திராசால ஆசிரமத்தில் தங்கியிருந்த சிவா **1925-ம்** ஆண்டு ஜூலை **23**-ம் நாள் இறந்தார்.

### வ.வே. சுப்பிரமணி ஐயர்

- வ.வே.சு ஐயர் என்று சுருக்கமாக குறிப்பிடப்படும் **வரகனேரி வேங்கட சுப்பிரமணி ஐயர்,** திருச்சி மாவட்டத் திலுள்ள வரகனேரி என்ற ஊரில் 1881-ம் ஆண்டு பிறந்தார்.
- பல மொழிகளைக் கற்று புரட்சி யாளரானார். இவரை கைது செய்ய ஆங்கிலேய அரசு முயன்றதால் பிரெஞ்சுப் பகுதியான புதுச்சேரியில் தலைமறைவாக இருந்தார்.
- பின்பு ஆங்கில அரசு பொதுமன்னிப்பு வழங்கியதால் தமிழ்நாட்டுக்கு வந்த இவர், திரு.வி.க.வைத் தொடர்ந்து **"தேசபக்தன்"** என்ற நாளிதழை நடத்தினார்.
- **1921**-ல் தேசபக்தனில் வ.வே.சு எழுதிய ஆட்சேபகமான தலையங்கத்தால் **9** மாத சிறைத் தண்டனை பெற்றார். சிறையில் இருந்தபோது "Story of Kambar" என்ற நூலை ஆங்கிலத்தில் எழுதினார்.
- பின்னர் **1919** முதல் **1932** வரை **"பாலபாரதி"** என்ற மாத இதழை நடத்தினார்.
- தீவிரவாத விடுதலைப் போராட்ட வீரரான வ.வே.சு.ஐயர் **நவீன தமிழ்**

**சிறுகதைகளின் தந்தை** என்றும் அழைக்கப்படுகிறார்.

- வ.வே.சு. ஐயர் வீரசவாக்கரின் **1857** முதலாவது இந்தியசுதந்திரப்போராட்டம் என்ற நூலை மொழி பெயர்த்து, அரசாங்க தடையை மீறி உலகின் பல பகுதிகளுக்கும் அனுப்பினார்.
- இவர் **1910**–ல் ரஷ்யாவுக்குச் சென்று வெடிகுண்டு தயாரிக்கும் முறையைக் கற்றுக்கொண்டு புதுவைக்கு வந்தார்.
- புதுவையில் தஞ்சம் புகுந்த ஐயர் **தர்மாலயம்** என்ற அமைப்பை ஏற்படுத்தி பயங்கரவாதப் புரட்சியாளர் களுக்குக் குத்துச் சண்டை, மல்யுத்தம், கத்திச் சண்டை, துப்பாக்கிச் சுடல் ஆகிய வற்றில் பயிற்சி அளித்தார்.
- இவர் **வீரவாஞ்சிநானின்** குரு ஆவார். இவர்தான் வாஞ்சிநாதனுக்கு பிரௌனிங் கைத்துப்பாக்கியால் சுடுவதற்கு பயிற்சி யளித்தார்.
- இவர் சேரன்மாதேவியில் **பாரத்து வாஜ்** ஆசிரமத்தை நிறுவினார்.
- இவர் ஜுன் **3, 1925**–ல் தமது **44**–வது வயதில் பாபநாசம் அருவியில் விழுந்து இறந்தார்.

## நீலகண்ட பிரம்மச்சாரி

- இவர் புதுவையில் தஞ்சம் புகுந்திருந்த போது **1910**–ம் ஆண்டு **பாரத மாதா சங்கம்** என்ற அமைப்பை ஏற்படுத்தினார்.
- இவர் புதுவையில் **சூர்யோதயம்** என்ற பத்திரிக்கையை நடத்தி வந்தார்.
- இவர் ஆஷ் கொலை வழக்கில் குற்றவாளியாகக் கருதபட்டு ஏழாண்டு கால சிறை தண்டனை பெற்றார்.
- சிறை மீண்ட நீலகண்ட பிரம்மச்சாரி கம்யூனிஸ்டாக மாறினார். வர்க்கப் போராட்டத்தில் ஈடுபட்டு **1922**–ம் புத்தாண்டு கால சிறை தண்டனை பெற்றார்.
- இவர் கர்நாடகத்திலுள்ள **நந்தி மலையில்** ஆசிரமம் ஒன்றை அமைத்து அமைதியாக வாழ்ந்து தனது 88வது வயதில் உயிர் நீத்தார்.

## பாரதியார்:

- சுப்பையா என்று அழைக்கப்பட்ட பாரதியார் தூத்துக்குடி (அப்போதைய திருநெல்வேலி) மாவட்டத்தில் உள்ள எட்டயபுரத்தில் சின்னசாமி அய்யர் – லக்குமி அம்மையார் தம்பதியரின் மகனாக டிசம்பர் **11, 1882-ல்** பிறந்தார். இவரது இயற்பெயர் சுப்பிரமணியன்.
- மகாகவி, தேசிய கவி, சீட்டுக்கவி என்றெல்லாம் புகழப்படும் சுப்பிர மணிய பாரதி ஒரு கவிஞர், எழுத்தாளர், பத்திரிக்கையாசியரியர், விடுதலைப் போராட்ட வீரர், சமூக சீர்த்திருத்தவாதி என பல்வேறு பரிமாணங்களைப் கொண்டவர்.
- இவர் தனது **11**-ம் வயதில் பள்ளியில் படித்து வரும் பொழுதே கவிபுனையும் ஆற்றலை வெளிப்படுத்தினார். இவருடைய கவித்திறனை பாராட்டி **பாரதி** என்ற பட்டம் எட்டயபுரம் அரசவையால் வழங்கப்பட்டது.

- **1904**-ம் ஆண்டு மதுரையில் பாரதி எழுதிய பாடல், **"விவேகபானு"** இதழில் வெளியானது.
- மகாகவி பாரதியார் **சுதேசமித்திரனில்** உதவி ஆசிரியராக நவம்பர் **1904** – முதல் ஆகஸ்ட் **1906** வரை பணி யாற்றினார்.
- பின்னர் தம் வாழ்நாளின் இறுதியிலும் ஆகஸ்ட் **1920** முதல் செப்டம்பர் **1920** வரை சுதேமித்திரனின் உதவி ஆசிரியராகப் பணியாற்றி மறைந்தார்.
- **"சக்கரவர்த்தினி"** என்ற மகளிர் மாத இதழிலும் (ஆகஸ்ட் 1904 முதல் ஆகஸ்ட் 1906 வரை) ஆசிரியராகப் பணியாற்றினார்.
- **1907**-ம் ஆண்டு ஏப்ரலில் **"இந்தியா"** என்ற தமிழ் வார இதழையும் **"பாலபாரதம்"** என்ற ஆங்கில இதழையும் வெளியிட்டார்.
- 1907-ல் **பிபின் சந்திரபாலை** சென்னைக்கு அழைத்து கூட்டங்கள் நடத்தி, அதுபற்றி **"இந்தியா"** இதழில் கட்டுரை எழுதினார். எனவே ஆங்கிலேய அரசு பாரதியை கைது செய்ய பிடி ஆணை பிறப்பித்தது. இதனால் **1908**-ல் பாரதியார் புதுச்சேரிக்கு தப்பிச் சென்று **1918** வரை அங்கேயே தங்கியிருந்து, தமிழ்ப் பணியைச் செய்தார்.
- புதுச்சேரியில் இருந்தபடியே **இந்தியா** வார இதழையும், **விஜயா** என்ற தமிழ் நாளிதழையும், பால பாரதம் என்ற ஆங்கிலமாத இதழையும், **சூர்யோதம்** (1910) என்ற புதுச்சேரியின் வார இதழையும் வெளியிட்டார்.
- கர்மயோகி (டிசம்பர் 1909 – 1910) என்ற புதுச்சேரியின் வார இதழையும் வெளியிட்டார்.
- கர்மயோகி (டிசம்பர் 1909-1910), தர்மம் (1910) ஆகிய இதழ்களிலும் ஆசிரியராகப் பணியாற்றினார்.
- 1909-ம் ஆண்டு இந்தியா மற்றும் விஜயா ஆகிய இதழ்கள் பிரிட்டிஷ் இந்தியாவில் தடை செய்யப்பட்டன.
- **சுதேசி, கீதங்கள், ஜென்ம பூமி, பாஞ்சாலி சபதம், மாதா மணி வாசகம், கண்ணன் பாட்டு, குயில் பாட்டு** ஆகிய பாடல் தொகுதிகளின் மூலம் நாட்டு மக்களிடையே **விழிப் புணர்வையும்** சுதந்திர உணர்வையும் ஏற்படுத்தினார்.
- **1918-ம்** ஆண்டு வ.உ.சி. உடன் இணைந்து தடையை மீறி ஊர்வலம் நடத்தியதால் 10 ஆண்டுகள் சிறைத் தண்டனை பெற்றார் சிவா.
- **1920**-ம் ஆண்டு விடுதலையான பாரதியார் சென்னையிலுள்ள திருவல் லிகேணி பகுதியில் வசித்து வந்தார். அங்குள்ள பார்த்தசாரதி கோயில் யானையால் தாக்கப்பட்டு நோய் வாய்ப்பட்டிருந்த பாரதியார், **1921**-ம் ஆண்டு செப்டம்பர் **11**-ம் நாள் இயற்கை எய்தினார்.

### வாஞ்சிநாதன்

- வாஞ்சிநாதன் **1886**-ம் ஆண்டு செங்கோட்டையில் பிறந்தார். இவரது பெற்றோர் ரகுபதி அய்யர் – ருக்மணி அம்மாள் ஆவர். இவரது இயற்பெயர் **சங்கரன்.**
- புதுச்சேரியில் தனது குருவான வ.வே.சு.ஐயரிடம் துப்பாக்கி சுடும் பயிற்சி பெற்ற வாஞ்சிநாதன், வ.உ.சி. மற்றும் சுப்பிரமணியம் சிவா ஆகியோரின் சிறைத் தண்டனைக்கு காரணமாக, திருநெல்வேலி மாவட்ட ஆட்சித் தலைவர் ஆஷ் துரையை மணியாச்சி இரயில் நிலையத்தில் 1911 ஜூலை 17–ம் நாள் சுட்டுக் கொன்றார். பின்னர் தானும் துப்பாக்கியால் சுட்டு தற்கொலை செய்துக் கொண்டார்.

### பாரதிதாசன்

- **கனகசுப்புரத்தினம்** என்ற இயற்பெயர் கொண்ட இவர் பாரதியார் மீது கொண்ட பற்றால் தமது பெயரை பாரதிதாசன் என மாற்றிக் கொண்டார்.
- இவர் கனகசபை முதலியார், இலக்குமி அம்மாள் ஆகியோருக்கு மகனாக 1891-ம் ஆண்டு ஏப்ரல் 29-ம் நாள் புதுச்சேரியில் பிறந்தார்.
- **தந்தை பெரியார்** அவர்கள் பாரதி தாசனுக்கு **"புரட்சிக்கவி"** என்ற பட்டயத்தை வழங்கினார்.
- இவரின் **பிசிராந்தையார்** என்ற நாடக நூலக்கு **1970**-ல் சாகித்ய அகாடமி விருது கிடைத்தது.
- தமிழ்நாடு அரசு **1990**-ல் இவரது படைப்புகளை பொதுவுடைமையாக்கியது.
- இந்திய அஞ்சல் துறையானது இவரது நினைவாக **2001** அக்டோபர் 9–ம் தேதி சிறப்பு அஞ்சல் தலையை வெளியிட்டது.
- தமிழக அரசு இவரது நினைவாக, ஒவ்வொரு ஆண்டும் சிறந்த தமிழறிஞர் களுக்கு பாரதிதாசன் விருதையும் வழங்கி வருகிறது.
- தமிழாசிரியராகப் பணியாற்றிய இவர் **1920**-ம் ஆண்டு நடைபெற்ற **ஒத்துழையாமை இயக்கத்தில்** பங்கேற்றார்.
- இவர் பாண்டியன் பரிசு, எதிர்பாராத முத்தம், குடும்ப விளக்கு, இருண்ட வீடு, அழகின் சிரிப்பு, இசையமுது, தமிழ் இயக்கம் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.
- இவர் "குயில்" (1948) என்னும் மாத இதழை நடத்தி வந்தார்.
- **பாவேந்தர்** என புகழப்பட்ட பாரதிதாசன் **1964**-ம் ஆண்டு ஏப்ரல் 21–ல் இயற்கை எய்தினார்.

### திரு.வி. கல்யாணசுந்தரம்

- திரு.வி.க. என சுருக்கமாக அழைக்கப் பட்ட **திருவாரூர் விருத்தாசலம் கல்யாண சுந்தரானார்.** சென்னை பூவிருந்தவல்லிக்கு அருகிலுள்ள துள்ளம் என்ற கிராமத்தில் 1883–ம் ஆண்டு ஆகஸ்டு 26–ம் நாள் பிறந்தார்.

- அரசியல், சமுதாயம், சமயம் என பல துறைகளிலும் ஈடுபாடு கொண்ட இவர் சிறந்த மேடைப் பேச்சாளர் ஆவார்.
- இவர் **1917** முதல் **1920** வரை **"தேசபக்தன்"** நாளிதழின் ஆசிரியராக விளங்கினார். பின்னர் **1920**-ல் **"நவசக்தி"** என்ற வார இதழை வெளியிட்டார்.
- **1921**-ம் ஆண்டு பக்கிங் ஹாம் மற்றும் கர்நாடிக் ஆலைத் தொழிலாளர்களின் ஊதிய உயர்வு கோரிக்கை வேலை நிறுத்ததை தலைமை ஏற்று நடத்தினார்.
- **1925**-ம் ஆண்டு டிசம்பர் மாதம் காஞ்சிபுரத்தில் திரு.வி.க. தலைமையில் சென்னை மாகாண காங்கிரஸ் மாநாடு நடைபெற்றது. அதில் வகுப்புவாத பிரதி நிதித்துவம் கோரும் தீர்மானத்தை தந்தை பெரியார் அளித்த போது அதை திரு.வி.க. ஏற்கவில்லை. இதனால் ஈ.வெ.ரா. காங்கிரஸில் இருந்து விலகினார்.
- **1926**-ம் ஆண்டு திரு.வி.க, காங்கிரஸில் இருந்து விலகினார்.
- அதற்கு பின்னர் முருகன் அல்லது அழகு, பெண்ணின் பெருமை, தமிழ்த் தென்றல், மனித வாழ்கையும் காந்தியடிகளும், புதுமை வேட்டல்போன்ற பல நூல்களை இயற்றினார்.
- தமிழ்த்தென்றல் என அழைக்கப்பட்ட திரு.வி.க. **1953**-ம் ஆண்டு செப்டம்பர் திங்கள் **19**-ம் நாள் இம்மண்ணுலகை விட்டு மறைந்தார்.
- **1983**-ம் ஆண்டு இவருடைய நூற்றாண்டு விழா தமிழக அரசால் சிறப்பாகக் கொண்டாடபபட்டது.
- **2005** அக்டோபர் 21-ல் இந்திய அரசு, திரு.வி.க. நினைவு அஞ்சல் தலையை வெளியிட்டது.

**இராஜாஜி**

- இராஜாஜி என்றும் சி.ஆர். என்றும் அழைக்கப்பட்ட சி.இராஜகோபாலாச் சாரி அப்போதைய சேலம் (தற்போதைய கிருஷ்ணகிரி) மாவட்டத்தில் உள்ள தொரப்பள்ளி என்ற ஊரில் டிசம்பர் 10,1878-ல் பிறந்தார்.
- இந்திய சுதந்திரப் போராட்ட வீரர், வழக்கறிஞர், எழுத்தாளர், அரசியல் வாதி என பன்முகம் கொண்ட இவர் **சேலத்து மாம்பழம்** என செல்லமாக அழைக்கப்பட்டார்
- சட்டக்கல்வி பயின்ற இவர், **1900** முதல் சேலத்தில் வழக்கறிஞராகப் பணிபுரிந்தார். **1917** முதல் **1921** வரை சேலம் நகர சபை தலைவராக பணியாற்றினார்.
- **1921**-ல் தீவிர அரசியலில் ஈடுபட்டு காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கத்திற்கும், கிலாஃபத் இயக்கத்திற்கும் ஆதரவு தெரிவித்தார்.
- **1925**-ல் திருச்செங்கோட்டில் புதுப் பாளையம் என்ற இடத்தில் **"காந்தி ஆசிரமம்"** அமைத்து மதுவிலக்குப் பிரச்சாரம் செய்தார்.

- **1930**-ம் ஆண்டு, தமிழ்நாட்டில் இராஜாஜி தலைமையில் வேதாரண்யத்தில் உப்பு சத்தியாகிரகம் நடை பெற்றது.
- **1937**-இல் நடைபெற்ற சென்னை மாகாணத் தேர்தலில் காங்கிரஸ் கட்சி வெற்றி பெற்றதால், ஜூலை **17**, அன்று சென்னை மாகாணத்தின் முதலமைச் சரானார்.
- இராஜாஜி தமது ஆட்சியின் போது மதுவிலக்குச் சட்டம், கைத்தொழில் பாதுகாப்புச் சட்டம், ஆலயப் பிரவேசச் சட்டம், விற்பனை வரி அறிமுகம் **(1937)**, ஆரம்பப் பள்ளியில் இந்தி கட்டாயப்பாடமாக அறிமுகப்படுத்துதல் **(1938)** போன்ற பல சீர்த்திருத்தச் சட்டங்களை இயற்றினார்.
- **1942**–ல் பாகிஸ்தான் தனி நாடு கொள்கையை காங்கிரஸ் ஏற்காததால் காங்கிரஸில் இருந்து விலகினார்.
- பின்னர் **1944**–ம் ஆண்டு மீண்டும் காங்கிரஸில் இணைந்து, முஸ்லீம் களுக்கு தனி நாடு தருவதே நல்லது என்ற தமது **சி.ஆர். திட்டத்தை** காந்தியடிகளிடம் (C.R.Formula) அளித்தார்.
- இவர் **1946** முதல் **1947** வரை மேற்கு வங்க ஆளுநராகப் பணியாற்றினார்.
- இவர் சுதந்திர இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக ஜூன் **21, 1948** முதல் ஜனவரி **25, 1950** வரை பதவி வகித்தார்.
- இந்திய கவர்னர் ஜெனரலாக இருந்த ஒரே இந்தியர் மற்றும் இந்தியாவின் கடைசி கவர்னர் ஜெனரல் ஆகிய சிறப்புக்குரியவர் இராஜாஜி.
- சுதந்திரத்திற்கு பிறகு **1952**–ம் ஆண்டு நடைபெற்ற முதல் பொதுத் தேர்வில் காங்கிரஸ் கட்சி வெற்றி பெற்றதால், தமிழக மேலவையின் உறுப்பினர் என்ற தகுதியுடன் ஏப்ரல் **10, 1952**–ல் தமிழக முதலமைச்சராகப் பதவி ஏற்றார்.
- **1953**–ம் ஆண்டு இவர் அறிமுகப் படுத்திய **குலக்கல்வி** திட்டத்திற்கு பெரும் எதிர்ப்பு தோன்றிய தால் **1954**-ம் ஆண்டு மார்ச் **25**-ம் நாள் முதல்வர் பதவியிலிருந்து விலகினார்.
- பின்னர் காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகிய இராஜாஜி **1959–ல் சுதந்திரக் கட்சியைத்** தொடங்கினார்.
- 1966–ல் தி.மு.க.வுடன் கூட்டணி வைத்து தேர்தலில் போட்டியிட்டார்.
- சக்கரவர்த்தி திருமகன் (இராமாயணம்) வியாசர் விருந்து (மகாபாரதம்), திக்கற்ற பார்வதி, கண்ணன் காட்டிய வழி (பகவத் கீதை) போன்ற பல நூல் களை எழுதிய இராஜாஜி டிசம்பர் **25, 1972**-ல் இயற்கை எய்தினார்.

**ஈ.வெ. ராமசாமி**

- **தந்தை பெரியார்** என பரவலாக அறியப்படும் ஈ.வெ.ராமசாமி சமூக சீர்த்திருத்தவாதியாவார்.
- **ஈரோடு வெங்கடப்ப ராமசாமி** நாயக்கர் என்பதன் சுருக்கமே ஈ.வெ.ரா. ஆகும்.
- இவர் ஈரோட்டில் வெங்கடப்ப நாயக்கர் – சின்னத்தாயி தம்பதியரின் மகனாக **1879**–ம் ஆண்டு செப்டம்பர் **17**–ம் நாள் பிறந்தார்.

- பெரியாரின் தாய் மொழி **கன்னடம்** ஆகும். இவர் தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகிய மூன்று திராவிட மொழிகளை பேசும் ஆற்றல் பெற்றவர்.
- **1898**–ம் ஆண்டு இவர் தமது **19**வது வயதில், 13வயது கொண்ட **நாகம்மையை** மணந்தார்.
- **1915**–ல் அரசியலில் ஈடுபட்ட ஈ.வெ.ரா., ஈரோட்டில் பிராமணரல்லாதோர் காங்கிரஸ் மாநாட்டை நடத்தினார்.
- **1918**–ல் ஈரோடு நகரசபை தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.
- இவர் 1919–ம் ஆண்டு காங்கிரஸில் இணைந்தார்.
- **1920**–ல் ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டார்.
- **1921**–ல் ஈரோட்டில் நடைபெற்ற கள்ளுக்கடை மறியலில் பெரியார் தம் மனைவி **நாகம்மை** மற்றும் தமக்கை **கண்ணம்மாள்** ஆகியோருடன் ஈடுபட்டார்.
- இந்த கள்ளுக்கடை மறியலின் போது, தன் சொந்த தோப்பிலேயே 1000 தென்னை மரங்களை வெட்டி வீழ்த்தினார்.
- **1922**–ம் ஆண்டு சென்னை மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார். அதன் பின்னர் நடைபெற்ற திருப்பூர் கூட்டத்தில் அரசு பணிகளிலும், கல்வியிலும் இட ஒதுக்கீட்டை அமல்படுத்த வேண்டும் என்ற கோரிக்கையை வைத்தார்.
- **1924**–ம் ஆண்டு மார்ச் **3**–ம் நாள் **கேரள** மாநிலத்தில் உள்ள **வைக்கம்** என்ற ஊரில், தாழ்த்தப்பட்ட மக்களுக்காக ஆலய நுழைவு போராட்டம் நடத்தி வெற்றி பெற்றார். இதனால் அவர் **"வைக்கம் வீரர்"** என பாராட்டப்பட்டார்.
- காங்கிரஸ் கட்சியில் இருக்கும் போதே அவர் பிராமணர் அல்லாதோரின் நலன் காக்க மே **2, 1924**-ல் **"குடியரசு"** என்ற தமிழ் வார இதழைத் தொடங்கினார்.
- 1925–ம் ஆண்டு வ.வே.சு. ஐயரின் **சேரன் மாதேவி** குருகுலத்தில் நிலவிய வருணாசிரம நடவடிக்கையை பெரியார் எதிர்த்தார்.
- நவம்பர் **1925**–ல் காஞ்சிபுரத்தில் திரு.வி.க தலைமையில் நடைபெற்ற மாநில காங்கிரஸ் மாநாட்டில் பெரியார் கொண்டு வந்த வகுப்புவாரி பிரதிநிதித்துவக் கொள்கையை காங்கிரஸ் ஏற்க மறுத்ததால், பெரியார் காங்கிரஸில் இருந்து விலகினார்.
- **1925**–ம் ஆண்டு காங்கிரஸ் கட்சி யிலிருந்துவிலகியபின்னர் **சுயமரிதை இயக்கத்தை** தொடங்கினார்.
- **1929**–ல் சுயமரியாதை இயக்கத்தின் முதல் மாநாடு செங்கல்பட்டில் நடை பெற்றது. அதில் சவுந்திர பாண்டியனார், குத்தூசி குருசாமி, மூவலூர் ராமா மிர்தம் அம்மையார் போன்றோர் பங்கேற்றனர்.

- **1926**-ல் "திராவிடன்" பத்திரிக்கையின் ஆசிரியராகப் பொறுப்பேற்றார். **1928** நவம்பர் **7**-ல் "Revolt" என்ற ஆங்கில இதழைத் தொடங்கினார்
- **1930** ஜனவரியில்; **"குடும்பக் கட்டுப்பாடு"** பற்றிய புத்தகத்தை வெளியிட்டு, இந்தியாவிலேயே முதன் முதலாக மக்கள் தொகையை கட்டுப்படுத்த மக்களிடம் விழிப் புணர்வை ஏற்படுத்தினார்.
- **1930**, மே **11**-ல் பெரியாரின் மனைவி நாகம்மை காலமானர்.
- **1933**-ம் ஆண்டு குடியரசு வார இதழ் ஆங்கிலேய அரசாங்கத்தால் தடை செய்யப்பட்டதால், 20.11.1933 அன்று **"புரட்சி"** என்ற வார இதழைத் தொடங்கினார்.
- **1934**-ம் ஆண்டு முதல் நீதிக்கட்சியை ஆதரிக்க தொடங்கிய ஈ.வெ.ரா. ஜனவரி **12, 1934**-ல் **"பகுத்தறிவு"** என்ற தமிழ் வார இதழை வெளியிட்டார். இதில் **முதன் முதலாக எழுத்துச் சீர்த்திருத்தம் செய்தார்.** தமிழ் எழுத்துக்களில் **14** எழுத்துக்களை குறைந்தார்.
- ஜுன் **1, 1935**-ல் நீதிக்கட்சியால் ஆரம்பிக்கப்பட்ட **"விடுதலை"** வார இதழை பெரியார் ஜனவரி **1, 1937** அன்று தினசரி செய்தித்தாளாக வெளியிட்டார்.
- **1937**-ல் இராஜாஜி அரசால் பள்ளி களில் இந்தி கட்டாயமாக்கப்படுவதை எதிர்த்து சிறை சென்றார்.
- நவம்பர் **13, 1938**-ல் சென்னையில் மறைமலையடிகளின் மகள் நீலாம்பிகை அம்மையார் தலைமையில் நடை பெற்ற மகளிர் மாநாட்டில், ஈ.வெ. ராவுக்கு "பெரியார்" எனும் பட்டம் வழங்கப்பட்டது.
- இவர் டிசம்பர் **29,1938**-ல் நீதிக் கட்சியின் தலைவரானார். இவர் 1939-ல் திராவிட இன ஒற்றுமை மாநாடு மூலம் **திராவிட நாடு** கோரிக்கை எழுப்பினார்.
- **1944**-ம் ஆண்டு ஆகஸ்டு **27** அன்று சேலத்தில் நடத்த நீதிக்கட்சி மாநாட்டில், அண்ணாதுரையின் தீர்மானத்தின் படி, நீதிக் கட்சியின் பெயர் **"திராவிடர் கழகம்"** என மாற்றம் செய்யப்பட்டது.
- **1949**-ல் 70 வயதான பெரியார் 28 வயதுடைய மணியம்மையை திருமணம் செய்து கொண்டார்.
- **1957**-ல் சாதியை ஒழிக்க தேசப்பட எரிப்பு மற்றும் கோயில்களில் சாதி ஆதிக்கம் ஒழியும் இயக்கத்தை நடத்தினார்.
- இவரின் சமுதாயப் பங்களிப்பை பாராட்டி 1970-ம் அண்டு ஜுன் 27-ம் நாள் ஐ.நா.வின் **யுனெஸ்கோ நிறுவனம் "புத்துலக தொலை நோக்காளர்", "தென்கிழக்கு ஆசியாவின் சாக்ரடீஸ்", "சமூக சீர்த்திருத்த இயக்கத்தின் தந்தை",** அறியாமை, மூடநம்பிக்கை, அர்த்த மற்ற சம்பிரதாயங்கள் மற்றும் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றின் எதிரி என்று பாராட்டி சான்றிதழ் வழங்கியுள்ளது.

- **1970**-ல் **"உண்மை"** என்ற மாதம் இருமுறை இதழானது திருச்சியில் பெரியாரால் துவக்கப்பட்டது.
- இவர் **1970**-ல் அனைவரையும் அர்ச்சகராக்கும் போராட்டத்தை நடத்தினார்.
- குடலிறக்க நோயினால் பெரும் அவதியுள்ள பெரியார் வேலூர் சி.எம்.சி. மருத்துவமனையில் அனுமதிக்கப் பட்டார். ஆனால் சிகிச்சை பலனின்றி **1973**-ம் ஆண்டு டிசம்பர் **24**-ம் நாள் தமது 25-வது வயதில் இயற்கை எய்தினார்.

## காமராஜர்

- காமராஜர்விருதுநகர்மாவட்டத்திலுள்ள விருதுப்பட்டி கிராமத்தில் **1903**-ம் ஆண்டு ஜூலை **15**-ம் தேதி குமாரசாமி நாடாருக்கும், சிவகாமி அம்மை யாருக்கும் மகனாகப் பிறந்தார்.
- அவருக்கு குலதெய்வமான **காமாட்சியின்** பெயரையே முதலில் சூட்டினார்கள். தயார் சிவகாமி அம்மையார் மட்டும் அவரை **"ராஜா"** என்றே அழைத்து வந்தார். நாளடையில் காமாட்சி என்ற பெயர் மாறி, காமராசு என்று ஆனது.
- சத்தியமூர்த்தியை குருவாக ஏற்றுக் கொண்ட காமராஜர் தன்னுடைய **16**-ம் வயதில் காங்கிரஸில் உறுப்பின ரானார்.
- **1920**-ல் ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கேற்றார்.
- **1922**-ல் நேரு தலைமையில் **"இந்தியக் குடியரசு காங்கிரஸ்"** என்ற பெயரில் மாநாடு ஒன்றை நடத்தி புகழ் பெற்றார்.
- **1930**-ம் ஆண்டு இவர் இராஜாஜி தலைமையில் நடைபெற்ற வேதாரண்யம் உப்பு சத்தியாகிரகத்தில் பங்கேற்றதால் கைது செய்யப்பட்டு (கல்கத்தா அலிப்பூர் சிறையில் / பெல்லாரி) சிறையில் அடைக்கப்பட்டார்.
- **1946** முதல் **1952** வரை சென்னை மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவராக இருந்தார்.
- சென்னை மாகாண முதல்வராக இருந்த இராஜாஜி பதவி விலகியதைத் தொடர்ந்து **1954**-ம் ஆண்டு ஏப்ரல் **13**-ம் நாள் காமராஜர் முதல்வராக பதவியேற்றார்.
- **1956**-ம் ஆண்டு ஏழை, மாணவர்கள் கல்வி பயில்வதற்கு உதவியாக **இலவச மத்திய உணவு திட்டம்** கொண்டு வந்தார்.
- பாரதியார் பிறந்த **எட்டயபுரத்தில்** தான் மத்திய உணவு திட்டத்தை முதன் முதலாக காமராஜர் தொடங்கி வைத்தார்.
- **1960**-ம் ஆண்டு ஒன்றாம் வகுப்பு முதல் பள்ளி இறுதி வகுப்பு வரை இலவசகல்வி அறிமுகப்படுத்தப்பட்டது. மேலும் இவரது ஆட்சியில் இலவச சீருடை வழங்கும் திட்டமும் நடை முறைப்படுத்தப்பட்டது.
- மூன்று முறை **(1947-57, 1957-62, 1962-63)** தமிழக முதல்வராக இருந்த காமராஜர், **1963**-ம் ஆண்டு

கே-திட்டம் (K-Plan) எனப்படும் **காமராஜர் திட்டத்தை** கொண்டு வந்தார். அத்திட்டப்படி கட்சியின் மூத்த தலைவர்கள் பதவி விலகி கட்சிப் பணியாற்ற வேண்டும்.

- அதன்படி, காமராஜர் **1963**-ம் ஆண்டு அக்டோபர் **2**-ம் நாள் முதல்வர் பதவியிலிருந்து விலகி, பொறுப்பினை பக்தவக்சலத்திடம் ஒப்படைத்துவிட்டு கட்சிப் பணியில் ஈடுபட்டார்.
- இவர் **1964**-ம் ஆண்டு புவனேஸ்வர் மாநாட்டில் அகில இந்திய காங்கிரஸின் தலைவரானார்.
- இவர் **1964**-ம் ஆண்டு மே **27** அன்று பிரதமர் நேரு இறந்ததும், லால் பகதூர் சாஸ்திரியை பிரதமராக்கினார்.
- "இந்தியாவைக் காப்போம் – ஜனநாயகத்தைக் காப்போம்" என்பது கர்மவீரரின் வேதவாக்கு.
- கர்மவீரர், கறுப்பு காந்தி, கல்விக் கண் திறந்தவர், படிக்காத மேதை, பெருந்தலைவர், ஏழைப்பங்காளி, கிங் மேக்கர் போன்றவை இவரது சிறப்புப் பெயர்களாகும்.
- இவர் இறந்த பிறகு **1976**-ம் ஆண்டு இவருக்கு **பாரத ரத்னா** விருது வழங்கப்பட்டது. மேலும் சென்னை உள்நாட்டு விமான நிலையத்திற்கு இவரது பெயர் சூட்டப்பட்டுள்ளது.
- காமராஜரின் நினைவிடம், சென்னை கிண்டியில் **1976**-ம் ஆண்டு பிப்ரவரி **14**-ம் நாள் திறக்கப்பட்டது.
- அக்டோபர் **2, 2000**-ல் கன்னியா குமரியில் பெருந்தலைவர் காமராஜர் மணிமண்டபம் திறக்கப்பட்டது.
- பின்னர் ஜனவரி **10, 1966**-ல் லால் பகதூர் சாஸ்திரி இறந்ததும் இந்திரா காந்தியைப்பிரதமராக்கினார். இதனால் காமராஜர் **"கிங் மேக்கர்"** என்று அனைவராலும் அழைக்கப்பட்டார்.
- **1967**-ம் ஆண்டு நடைபெற்ற செனனை மாநில சட்டமன்றத் தேர்தலில் காமராஜர் விருதுநகர் தொகுதியில் நின்று தோல்வியடைந்ததைத் தொடர்ந்து அகில இந்திய காங்கிரஸ் தலைவர் பதவியை ராஜினாமா செய்தார்.
- **1969**-ம் ஆண்டு காங்கிரஸ் இரண்டாக பிளவுபட்ட போது காமராஜர் பழைய காங்கிரஸிலேயே இருந்தார்.
- திருமணமே செய்து கொள்ளாமல் நாட்டுக்காகவே தன் வாழ்வை அர்பணித்த காமராஜர், **1975**-ம் ஆண்டு அக்டோபர் 2-ம் நாள் இயற்கை எய்தினார்.

### சத்தியமூர்த்தி

- சத்தியமூர்த்தி ஓர் காங்கிரஸ் அரசியல் வாதி மற்றும் இந்திய விடுதலை வீரராவார்.
- இவர் புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் என்ற ஊரில் **1887**-ம் ஆண்டு ஆகஸ்ட் **19**-ம் நாள் பிறந்தார்.
- சென்னை கிறிஸ்த்துவக் கல்லூரியில் பட்டம் பெற்ற பின்னர், சென்னை சட்டக் கல்லூரியில் சேர்ந்து சட்டம் பயின்றார்.

- இவரது பேச்சாற்றல் திறமையைக் கண்ட காங்கிரஸ் 1919-ம் ஆண்டு மாண்டேகு - செம்ஸ்போர்டு சீர்த்திருத்தங்கள் மற்றும் ரௌலட் சட்டத்திற்கு எதிரான இணை நாடாளு மன்றக் குழுவில் வாதிட, காங்கிஸின் பிரதிநிதியாக இவரை இங்கிலாந்து அனுப்பியது.
- இவர் இங்கிலாந்தில் இருந்த போது **"தி இந்து"** (The Hindu) ஆங்கில நாளிதழின் லண்டன் செய்தியாளராக 10 நாள் பணியாற்றினார்.
- **1930**-ம் ஆண்டு சென்னை பார்த்தசராதி கோயிலில் இந்தியப் கொடியை ஏற்ற முயன்றபோது கைது செய்யப்பட்டார்.
- **1936**-ல் சென்னை மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவராக சத்தியமூர்த்தியும், அவரது சீடர் காமராஜர் செயலராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்
- **1939**-ம் ஆண்டு இவர் சென்னை மேயராகத் தேர்வு செய்யப்பட்டார். அப்போது சென்னையில் நிலவிய கடும் தண்ணீர் பஞ்சத்தைப் போக்க, அப்போதைய சென்னை மாகாண ஆளுநர் **சர்.ஆர்தர்ஹோப்** உதவி யுடன் **பூண்டி நீர்த்தேக்கத்திற்கு** அடிக்கல் நாட்டினார்.
- **1942**-ம் ஆண்டு தனிநபர் சத்தியாகிரகம் செய்தமையால் கைது செய்யப்பட்டு நாக்பூரிலுள்ள அமராவதி சிறையில் அடைக்கப்பட்டார். அங்கு செல்லும்போது ஏற்பட்ட முதுகுத் தண்டு காயத்தினால் பாதிக்கப்பட்டு அவதிப்பட்ட அவர் 1943-ம் ஆண்டு மார்ச் 28-ம் நாள் சென்னை பொது மருத்துவமனையில், சுதந்திரக் காற்றை சுவாசிக்காமலேயே இறந்தார்.
- 1944-ம் ஆண்டு பூண்டி நீர்த்தேக்கம் கட்டி முடிக்கப்பட்ட போது இவர் உயிருடன் இல்லை. இவரது முதன்மை சீடரான காமராஜர் இந்த நீர்த்தேக்கத்திற்கு **"சத்தியமூர்த்தி நீர்த்தேக்கம்"** என இவரது பெயரையே வைத்தார்.
- தீரர் என்றும், தீரர் சத்தியமூர்த்தி என்றும் அழைக்கப்பட்ட இவரின் நினைவாக 1987-ம் ஆண்டு நினைவு அஞ்சல்தலை வெளியிடப்பட்டது.

## தில்லையாடி வள்ளியம்மை

- வள்ளியமை தென்னாப்பிரிக்காவில் உள்ள ஜோகன்னஸ்பர்க் நகரில் **1989**-ம் ஆண்டு பிப்ரவரி 22-ம் தேதி பிறந்தார்.
- இவரது தந்தை முனுசாமி முதலியார், தாய் ஜானகியம்மாள் ஆவர். இவரது பெற்றோர்களின பூர்வீகம் தஞ்சாவூருக்கு அருகிலுள்ள **தில்லை யாடி** என்ற கிராமம் ஆகும்.
- இந்தியாவிற்கு ஒருமுறை கூட சென்று பார்த்திராத நிலையில், வள்ளியம்மை இந்தியா மீது மிகுந்த நாட்டுப்பற்று உடையராக இருந்தார்,
- இவர் தென்னாப்பிரிக்காவில் நிலவிய இனவெறிக்கு எதிராக காந்தியடிகள்

நடத்திய அறப் போராட்டத்தில் கலந்து கொண்டார். இதனால் கைது செய்யப் பட்டு **3** மாதம் சிறைத் தண்டனை பெற்றார்.

- நோய்வாய்ப்பட்ட நிலையில் விடுதலை யான வள்ளியம்மை தனது **16**–வது வயதில் **1914**–ம் ஆண்டு பிப்.**14**–ம் நாள் இறந்தார்.
- **1971**–ம் ஆண்டு இந்திய அரசு இவரது நினைவாக தற்போதை நாகப்பட்டினம் மாவட்டத்திலுள்ள தில்லையாடி கிராமத்தில், பொது நூலகத்துடன் கூடிய தில்லையாடி வள்ளியம்மை நினைவு அரங்கை அமைத்துள்ளது.
- சிறையில் நோய்வாய்ப்பட்டிருந்த அவர் விடுதலையாகும் போது வெறும் எலும்பும் தோலுமாக இருந்தார். அப்போது ஒருவர், நீங்கள் இந்தியராக இருந்து கஷ்டப்படுவதை விட ஏன் தென்னாப்பிரிக்கராக உங்களை பதிவு செய்யக்கூடாது? தேசியக் கொடி கூட இல்லாத இந்தியாவுக்காக போராடி என்ன செய்யப் போகிறீர்கள்? என்று கேட்டதற்கு, வள்ளியம்மை, தனது காவி, வெள்ளை, பச்சைநிறசேலையை கிழித்து இதோ "எங்கள் கொடி எங்கள் தாய்நாடு" என்று முழங்கினார்.
- வள்ளியம்மை வழங்கிய வடிவிலேயே காந்தியடிகள் தேசியக் கொடியை வடிவமைத்தார்.
- **2008**–ம் ஆண்டு டிசம்பர் **31**–ம் நாள் இவரது நினைவாக, நினைவு அஞ்சல் தலை வெளியிடப்பட்டது.

## திருப்பூர் குமரன்

- திருப்பூர் குமரன் இந்திய விடுதலைப் போராட்ட தியாகி ஆவார். இவர் ஈரோடு மாவட்டத்திலுள்ள சென்னிமலையில் **1904**–ம் ஆண்டு அக்டோபர் **4**–ம் தேதி பிறந்தார்.
- **1932**–ம் ஆண்டு சட்டமறுப்பு இயக்கத்தின் போது திருப்பூரில் **தேச பந்து இளைஞர் மன்றம்** ஏற்பாடு செய்த மறியல் போராட்டத்தில், இவர் கையில் தேசியக் கொடியை ஏந்தி தொண்டர் படைக்குத் தலைமை ஏற்றுச் சென்றார்.
- அப்போது போலீஸ் நடத்திய தடியடியில் மண்டை பிளந்து மயங்கி விழுந்த நிலையிலும், கையில் ஏந்திய தேசியக் கொடியை மண்ணில் விழாமல் காத்தார். இதனால் இவர் **"கொடிகாத்த குமரன்"** என்று அழைக்கப்படுகிறார்.
- பின்னர் ஜனவரி **11, 1932**அன்று மருத்துவமனையில் உயிரிழந்தார்.
- தமிழக அரசு இவரது தியாகத்தை போற்றும் வகையில் திருப்பூரில் நினைவகம் ஒன்றை அமைத்துள்ளது.
- **2004**–ம் ஆண்டு அக்டோபர் மாதம் இவரது பிறந்தநாள் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு, நினைவு அஞ்சல் தலை வெளியிடப்பட்டது.

## கேப்டன் லட்சுமி

- கேப்டன் லட்சுமி, லட்சுமி சுவாமிநாதன் மற்றும் ஷேகல் என்றெல்லாம் அழைக்கப்பட்ட லட்சுமி, **1914**–ம்

ஆண்டு அக்டோபர் **24**–ம் நாள் சென்னையில் பிறந்தார். இவரது தந்தை டாக்டர் எஸ்.சுவாமிநாதன் சென்னை உயர்நீதிமன்றத்தில் வழக்கறிஞராகப் பணியாற்றினார். இவரது தாயார் ஏ.வி. அம்முகுட்டி என்கிற அம்மு சுவாமிநாதன் ஒரு சமூக வேசகராவார்.

- சென்னை மருத்துவக் கல்லூரியில் பயின்று **1938**–ம் ஆண்டு மருத்துவர் பட்டம் பெற்றார். **1940**ல் சிங்கப்பூர் சென்ற அவர் அங்குள்ள இந்தியக் தொழிலாளர்கள் மற்றும் ஏழைகளுக்கு மருத்துவ சேவை செய்தார்.
- **1942**–ம் ஆண்டு இந்திய தேசிய இராணுவம் (INA) உருவாக்கப்பட்டது. அதன் ஒரு பிரிவான ஜான்சிராணி பெண்கள் படைப்பிரிவு **1943**–ம் ஆண்டு ஜூலையில் உருவாக்கப்பட்டது.
- ஜான்சி ராணி பெண்கள் படைப்பிரிவில் சேர்ந்த லட்சுமி சுவாமிநாதன் பின்னர் அதன் தலைவராக நியமிக்கப்பட்டார்.
- பின்னர் நேதாஜி உருவாக்கிய **“ஆசாத் இந்த்”** அரசாங்கம் எனப்படும் இந்திய சுதந்திரத்திற்கான தற்காலிக அரசாங்கத்தில் மகளிர் அமைப்புக்கான அமைச்சராக இருந்தார்.
- இந்திய தேசிய ராணுவத்தில் பணி யாற்றிய கலோனல் **பிரேம் குமார் ஷேகல்** என்பரை **1947** மார்ச்சில் மணந்த பின் கான்பூரில் வாழ்ந்து வந்தார்.
- **1971**–ல் இவர் இந்தி கம்யூனிஸ் கட்சியில் (மார்க்சிய) சேர்ந்தார்.
- **2002**–ம் ஆண்டு நடைபெற்ற இந்திய ஜனாதிபதி தேர்தலில் இடதுசாரி கட்சிகளின் சார்பில், அப்துல்கலாமை எதிர்த்து போட்டியிட்டார்.
- **1998**–ம் ஆண்டு கேப்டன் லட்சுமிக்கு பத்மவிபூஷன் விருது வழங்கப்பட்டது.

**டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி**

- டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி ஜூலை **30,1886**–ம் ஆண்டு புதுக்கோட்டை – யில் பிறந்தார். இவரே **இந்தியாவின் முதல் பெண் மருத்துவராவார்.**
- **1923**–ம் ஆண்டு இவரது தங்கை புற்று நோயால் பாதிக்கப்பட்டு இறந்தார். இதனால் புற்று நோயை அடியோடு ஒழிக்க வேண்டும் என்று சபதம் மேற் கொண்டார். எனவே **1949**–ம் ஆண்டு புற்றுநோய் மருத்துவ நிவாரண மருத்துவமனையை தொடங்கினார்.
- இவரது சீறிய முயற்சியால் சென்னை அடையாறு புற்றுநோய் ஆராய்ச்சி நிறுவனம் தோற்றுவிக்கப்பட்டது. இந்தியப் பிரதமர் ஜவஹர்லால் நேரு இந்த மருத்துவமனைக்கான அடிக் கலை நாட்டினார்.
- டாக்டர் முத்துலட்சுமி மருத்துவம் மட்டுமின்றி, அரசியல் மற்றும் சமூக சீர்திருத்தங்களில் ஆர்வம் கொண்டிருந்தார்.
- தமிழ்நாட்டில் காணப்பட்ட கொடிய பழக்கமான **தேவதாசி முறையை**

